# "உபயோகித்துப் பாருங்கள்...

## ...நீங்களும் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து அதிக அழகைப் பெறலாம்."

என்று கூறுகிறார்

*எஸ்.மேனகா*

எஸ். மேனகா கூறுவதாவது: "ஒரு அற்புதமான அழகு பராமரிப்பு இது. லக்ஸ் டாய்லட் சோப்பின் மென்மையான நுரையை உங்கள் சருமத்தின்மேல் நன்றாகத் தேய்த்து பிறகு கழுவவும். வழக்கமாக உபயோகித்தால் லக்ஸ் டாய்லட் சோப் உங்கள் சருமத்திற்கு மலர்ச்சியும் அழகும் தரும்.

# லக்ஸ் டாய்லட் சோப்




சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 389-X30 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 | இதழ் 20

1953 டிசம்பர் 13

விஜய ஞு | கார்த்திகை 28





## ஸ்ரீ பொதுஜனம் கவனிக்கிறார்!




சென்னை சட்டசபை காங்கிரஸ் கட்சிக் கூட்டம் டிசம்பர் மாதம் 14-உ கூடுகிறது. அக் கூட்டத்தில் எம். எல். ஏ.க்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்பதைத் தமிழ் மக்கள் ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறார்கள்.



மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 20

# தலைவலி தீர்ந்ததா?

மூன்று மாதத்துக்கு முன்னால் தமிழ் நாட்டுக்கு ஒரு தலைவலி உண்டாயிற்று. இந்த இராஜ்யத்தின் காங்கிரஸ் கட்சித் தலைமையையும் முதன் மந்திரிப் பொறுப்பையும் பற்றிய தலைவலிதான்.

நம் ஆந்திர சகோதரர்கள் தனியாகப் பிரிந்து சென்ற பிறகு, தமிழ் நாட்டின் முன்னேற்றத்தில் எல்லாருடைய கவனமும் ஈடுபட வேண்டிய சந்தர்ப்பத்தில், அந்தத் தலைவலி தோன்றியது.

அது தானாகத் தோன்றிவிட வில்லை. ராஜாஜியை எதிர்த்து அவரை முதன் மந்திரிப் பதவியிலிருந்து நீக்கிவிட வேண்டும் என்று சிலர் கூச்சலைக் கிளப்பி அத் தலைவலியை வேண்டும் என்றே உண்டாக்கினார்கள்.

ராஜாஜிக்கு இந்தக் கூச்சல் பெரிதும் வியப்பை அளித்திருக்கும்; அதே சமயத்தில் மனச் சங்கடத்தையும் உண்டாக்கி யிருக்கும்.

"நாம் அரசியல் வாழ்விலிருந்து ஓய்வு பெற்று நிம்மதியாக இருக்க எண்ணிய சமயத்தில் 'நீர் வந்துதான் காப்பாற்ற வேண்டும்' என்று கூச்சலிட்டுத் தலைவலியை உண்டாக்கினார்கள். அதைக் கேட்டு விட்டு வந்து ஒப்புக் கொண்டோம். இப்போது எச்சமயம் நாட்டுக்குக் கெடுதலின்றி விலகிக் கொள்ளலாம் என்று தக்க சந்தர்ப்பம் பார்த்துக் கொண்டிருக்கும் சமயத்தில், இப்படி இன்னொரு விதக் கூச்சலிட்டுத் தலைவலியை உண்டாக்குகிறார்களே? ஒப்புக் கொண்ட பொறுப்பைப் பரிபூரணமாக நிறைவேற்றி விட்டுத் தமிழ் நாட்டை நல்ல நிலைமையில் விட்டு விட்டு விலகுவதா? அல்லது இவர்களுடைய கூச்சலுக்கும் தலைவலிக்கும் பயந்து உடனே விலகுவதா?" என்று ராஜாஜி சிறிது திண்டாடித்தான் போயிருப்பார்.

ஆனால் ராஜாஜியைக் காட்டிலும் அதிகமாக, - பன்மடங்கு அதிகமாக, - தலைவேதனையும் மன வேதனையும் அடைந்தவர்கள் தமிழ் நாட்டு மக்கள்தான்.

சென்ற பொதுத் தேர்தலில் அவர்கள் வோட்டுக் கொடுத்துத் தேர்ந்தெடுத்து அனுப்பிய அற்புதமான காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் சிலருடைய காரியம் தமிழ் மக்களைத் திகைக்கச் செய்து விட்டது.

"சென்ற ஆண்டு ஆரம்பத்தில் இவர்கள் பட்டபாடு என்ன? ராஜாஜியிடம் ஓடி ஓடிச் சென்று முறை யிட்டதென்ன? வேண்டிக் கொண்டதென்ன? இப்போது ராஜாஜிக்கு எதிராக ஓடி ஓடிக் கையெழுத்து வாங்குவது என்ன? இந் நாட்டை ஆளுவதற்காக நம் வோட்டை வாங்கிக் கொண்டு போன பிரதிநிதிகளின் இலட்சணம் இதுவா? ஒரு வழியாக இவர்களையும் சென்ற தேர்தலில் தோற்கச் செய்யாமல் போனோமே!" என்று பச்சாதாபப் பட்டார்கள்.

'ஜனநாயகத்தின் உயிர் நிலை, மக்கள் இடை விடாமல் விழிப்புடனிருத்தல்' என்று மேனாட்டு அறிவாளி ஒருவர் கூறி யிருக்கிறார். ஒரு நிமிஷம் ஜனங்கள் சிறிது அசந்து அசட்டையாக இருந்து விட்டாலும் ஜனநாயகம் பறிபோய் விடும்; அக்கிரமக் காரர்கள் ஆட்சியைக் கைப்பற்றிக் கொள்வார்கள். ஜனங்கள் இடைவிடாமல் எச்சரிக்கையாக இருந்தால்தான் ஜனநாயகம் நிலைத்து நிற்கும்.

இந்த உண்மையைத் தமிழ் மக்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள் என்று சென்ற சில தினங்களில் வெளியாயிற்று. எத்தனை நகர காங்கிரஸ் கமிட்டிகள், எத்தனை தாலுகா காங்கிரஸ் சபைகள், எத்தனை இளைஞர் காங்கிரஸ் அமைப்புகள், எத்தனை மாபெரும் பொதுக் கூட்டங்கள்,-ராஜாஜி எதிர்ப்பாளரைக் கண்டித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றின என்பதைக் கணக்கெடுக்கவும் முடியாதபடி ஆகிவிட்டது. பத்திரிகைகளுக்குக் கடிதம் எழுதுவோர் தொகை ஆயிரக் கணக்கிலே பெருகி விட்டது.

இப்படிப் பொது மக்கள் சில எம். எல். ஏ.க்களின் செயலை ஆத்திரத்துடன் கண்டித்துக் கொண்டிருக்கையில், எரிகிற தீயில் எண்ணெய் ஊற்றுவது போல், ராஜாஜிக்கு எதிராக எம். எல். ஏ.க்கள் போட்ட கையெழுத்துக்கள் பற்றிய கணக்குகள் சில பத்திரிகைகளில் விசித்திரமான முறையில் வெளியாகிக் கொண்டிருந்தன.

"எண்பத்தொன்று கையெழுத்து ஆகிவிட்டது" என்றார்கள். ஒரு வாரத்துக்குப் பிறகு "எண்பத்து நாலு ஆகிவிட்டது" என்றார்கள். இன்னும் சில நாள் கழித்து "சரியாக 76½ கையெழுத்து ஆகியிருக்கிறது" என்றார்கள். "முன்னேயே எண்பத்து நாலு என்று சொன்னீர்களே!" என்று கேட்டால், "ஆமாம்; எண்பத்து நாலும் எழுபத்தாறையும் சேர்த்து மொத்தம் 160½ கையெழுத்து" என்றார்கள். "மொத்தம் கட்சி அங்கத்தினர் 144 பேர்தானே!" என்றால், "அதனால் என்ன! சிலர் இரண்டு தடவை, மூன்று தடவைகூடக் கையெழுத்துப் போட்டிருக்கிறார்கள்! அவ்வளவு ஆர்வம் அவர்களுக்கு! இன்னும் எத்தனை கையெழுத்து வேணுமானாலும் போடத் தயார்!" என்றார்கள்.

நன்றாக விவர மறிந்தவர்களை விசாரித்ததில், "இரண்டு மூன்று பேர் உட்கார்ந்து ஆரம்பத்திலேயே எண்பத்தொரு கையெழுத்துக்களை உத்தேசமாகப் போட்டு வைத்துக் கொண்டார்கள். பிறகு, ஒவ்வொன்றாகச் சேர்த்து எண்பத்துநாலு ஆக்கப் பார்த்தார்கள்" என்று தெரிந்தது.

காங்கிரஸ் காரியக் கமிட்டி புது டில்லியில் கூடுவதற்கு இரண்டு நாளைக்கு முன்பு கையெழுத்துக்காரர்களின் தலைவரான டாக்டர் வரதராஜுலு நாயுடு இது சம்பந்தமாக உத்தியோக பூர்வமான அறிக்கையை வெளியிட்டார்.

"ராஜாஜியிடம் நம்பிக்கை இல்லை என்று. தேர்ந்தெடுத்த அங்கத்தினரில் பாதிப் பேருக்கு மேல் கையெழுத்துப் போட்டு விட்டார்கள். ஸ்ரீ காமராஜரிடம் கொடுத்துப் பண்டித நேருவுக்கு அனுப்பி விட்டோம்!" என்று சொன்னார்.

உடனே பொதுஜனங்களின் கவலை ஒருவாறு தணிந்தது. "இந்தத் தப்புத்தண்டாக் காரியத்தை நேருஜி சரியானபடி கவனித்துக் கொள்வார்" என்று மக்கள் நிம்மதி அடைந்தார்கள்.

ஆனால் கையெழுத்திட்ட எம். எல் ஏ.க்களைக் கவலை பிடித்துக் கொண்டது. "ஸ்ரீ காமராஜ் திரும்பி வரும்போது புது மந்திரி சபையின் ஜாபிதாவைக் கொண்டு வருவாரே! அதில் நம் பெயர் இருக்குமோ, என்னமோ!" என்ற கவலையினால் அவர்களுக்குத் தலைவலி வந்து விட்டது.

"அடாடா! இரண்டு தடவைக்குப் பதில் மூன்று தடவை கையெழுத்திடாமல் போனோமே!" என்று சிலர் வேதனைப்பட்டார்கள்.

"நமக்கு மந்திரி பதவி என்னமோ நிச்சயம். ஆனால் சரியானபடி இலாகாக்களைப் பிரித்துக் கொடுப்பார்களா!" என்ற கவலை வேறு சிலரைப் பற்றிக் கொண்டது.

ஆகக் கூடி, தமிழ்நாட்டுப் பொது ஜனங்களின் தலைவலியில் ஒரு பாதியை ஜனப் பிரதிநிதிகள் ஏற்றுக் கொண்டார்கள்.

எல்லாத் தலைவலிகளுக்கும் சேர்த்துப் பண்டித ஜவாஹர்லால் நேரு பலமான அதிர்ச்சி வைத்தியம் செய்தார். முன்னொரு தடவை காங்கிரஸுக்கே அதிர்ச்சி வைத்தியம் செய்தவர் அல்லவா! அந்தப் பயிற்சி எங்கே போய் விடும்!

"கையெழுத்துக்கள் என்னிடம் வந்து சேரவில்லை. அப்படி யாராவது கையெழுத்துப் போட்டிருந்தால் தவறான காரியம். டாக்டர் வரதராஜுலு பத்திரிகைகளுக்கு அறிக்கை விடுத்தது பெரும் முறைத் தவறு. ராஜாஜியை நீடித்துச் சென்னை முதன் மந்திரியாயிருக்கும்படி கேட்டுக் கொள்ள வேண்டுமென்று நானும் பார்லிமெண்டரி போர்டும் அபிப்பிராயப்படுகிறோம். இதைத் தெரிந்துகொண்டு சென்னைக் காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் ஒழுங்காக நடந்து கொள்ளட்டும்!" என்று ஒரே போடாகப் போட்டு விட்டார்.

எம். எல். ஏ.க்கள் கையெழுத்துப் போட்ட மகஜரை எடுத்துக் கொண்டு போன ஸ்ரீ காமராஜ் அதைக் காங்கிரஸ் தலைவரிடம் கொடுக்கும் உத்தேசமே தமக்கு இல்லை என்று சொல்லி விட்டார்.

ஐயோ! பாவம்! மூன்று மாதமாகச் சிலர் அங்குமிங்கும் ஓடித் திரிந்து படாத பாடு பட்டு எண்பத்தொன்றிலிருந்து தொடங்கிக் கையெழுத்துச் சேகரித்து அதை ஐம்பத்தாறாகப் பெருக்கச் செய்து கடைசியில் நாற்பத்துநாலுக்குக் குறைவில்லை யென்று முடிவு கட்டிய கையெழுத்துப் படலம் இவ்வாறு முடிவடைந்தது!

* * *

ஆனால் தமிழ் மக்களின் தலைவலி இத்துடன் அடியோடு தீர்ந்து விட்டதாக நாம் கருதவில்லை. தலைவலி மாத்திரை விழுங்கியதும் தலைவலி நிற்பது போன்ற தாற்காலிக நிலைதான் இது.

ஒரு தடவை இம்மாதிரி முயற்சியில் இறங்கி விட்டவர்கள் அப்படி ரொம்ப காலம் சும்மா இருந்து விட மாட்டார்கள். ஜவாஹர்லால் நேரு சொன்னாலும் சரி, அவருடைய தந்தையாகிய மோதிலால் நேருவே திரும்பி வந்து சொன்னாலும் சரி, ஏதாவது தகராறு விளைவித்துக் கொண்டு தானிருப்பார்கள்.

அதனால் தேச முன்னேற்றமும் பொது நலமும் நிலைகுலையாமல் பொது மக்கள் தான் எச்சரிக்கையுடனிருந்து கவனித்து வரவேண்டும்.

மூன்று மாதக் கையெழுத்துக் கிளர்ச்சிப் படலத்தினால் சில நன்மைகளும் விளைந்திருக்கின்றன.

தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர்களிலும், காங்கிரஸ் எம். எல். ஏ.க்களிலும் உண்மையான தேச பக்தர்களும் தேசிய வாதிகளும் யார் யார் என்பதும், பதவிப் பற்றுக் கொண்ட சுயநலவாதிகள் யார் யார் என்பதும், சுவரின் மேல் பூனையாக இருந்து ஜெயிக்கும் கட்சியில் சேரும் இயல்புடையவர்கள் யார் யார் என்பதும், காங்கிரஸ் போர்வையில் உள்ள திராவிடக் கழகத்தினர் யார் யார் என்பதும் இப்போது ஒருவாறு தெரிய வந்திருக்கின்றன.

காங்கிரஸ் போர்வையில் உள்ள திராவிடக் கழகத்தினர் தங்கள் எழுத்திலும் பேச்சிலும் செயலிலும் அசல் திராவிடக் கழகத்தினரைப் புறமுதுகிடும்படி செய்துவிட்டார்கள். திராவிடக் கழகத்தாரும் திராவிட முன்னேற்றக் கழகத்தாரும் காங்கிரஸிற்குள்ளே இருந்து இயங்கும் திராவிடக் கழக வாதிகளைப் பார்த்து "நீங்கள் எங்களை வெகுவாக மிஞ்சி விட்டீர்கள். இனி எங்கள் காரியத்தை நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்; எங்கள் கடையைக் கட்டி விடுகிறோம்" என்று சொல்லக் கூடிய அளவு துவேஷப் பிரசார முறைகளைக் காங்கிரஸ் திராவிடக் கழக வாதிகள் கையாண்டிருக்கிறார்கள்.

தமிழ்நாட்டுக் காங்கிரஸ் ஸ்தாபனத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்களும் இம்மாதிரி பிரசாரங்களை அதி தீவிர முறையில் செய்யும் அதிசயத்தைக் கண்டோம்.

இதையெல்லாம் இம்மாகாணத்தின் காங்கிரஸ் நிர்வாகிகள் இனியும் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தால், காங்கிரஸ் அமைப்புக்கே தலைவலி கண்டுவிட்டது என்றுதான் பொது மக்கள் தீர்மானிக்க வேண்டியிருக்கும். அந்தத் தீர்மானத்துக்கேற்ப ஜனங்கள் நடந்து கொள்ளவும் செய்வார்கள். தமிழ் மக்களைப் போல் ஜனநாயகத்தை விழிப்புடனிருந்து பாதுகாப்பவர்கள் வேறு எங்கும் இல்லை என்பதையும் நிலை நாட்டுவார்கள்.

# காலனி என்னும் கொடுங்கோல்

உலக அமைதியை உருக்குலைக்கக் கூடிய காரியத்தை யார் செய்தாலும், உலகத்தில் உள்ள எந்தப் பிரதேசத்தில் செய்தாலும் அதை இந்தியா கண்டிக்காமல் இருக்க முடியாது.

அது போலவே கடல் கடந்து சென்று ஸ்தாபித்துள்ள இந்திய சகோதர சகோதரிகள் எந்த நாட்டில் இருப்பினும், அவர்களுக்கு அவமதிப்பு ஏற்படுவதையோ, அவர்களுடைய தர்ம நியாயமான உரிமைகள் பறிக்கப்படுவதையோ பாரத மக்கள் சகித்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

இதுதான், பாரத நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன் இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை அனுஷ்டித்து வந்த கொள்கை.

இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னரும், இந்தக் கொள்கையிலிருந்து காங்கிரஸ் சிறிதும் வழுவவில்லை என்பது சென்ற வாரம் வெளியாயிற்று.

சென்ற ஆறாம் தேதி புது டில்லியில் நடந்த காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் வல்லரசுகளின் காலனிக் கொள்கையை ஆணித்தரமாகக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேறியது.

ஒரு நாட்டு மக்களின் சுதந்திரத்தில் தலையிட மற்றொரு நாட்டுக்கு உரிமை இல்லையென்பதை ஐக்கிய நாடுகள் சபைச் சாஸனம் சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவாகக் கூறுகிறது.

எனவே ஐ. நா. சபையில் முக்கிய ஸ்தானம் வகிக்கும் வல்லரசுகள், தங்களுடைய காலனிக் கொள்கையின் மூலம் மேற்படி சபையின் அடிப்படையான விதிகளுக்கு விரோதமாக நடந்து வருகின்றன என்றே ஏற்படுகிறது.

வல்லரசுகளின் ஆதிக்கத்துக்கு உட்பட்ட காலனிகள் யாவும், உலக அமைதியைச் சீர்குலைக்கும் தீப்பொறிகளாக இருந்து வருகின்றன என்று கூறுவது மிகையாகாது.

மேற்படி காலனிகளில் வாழும் மக்களின் சுதந்திர அபிலாஷையை நசுக்க வல்லரசுகள் முற்படுவது, உலக நாடுகளின் பொதுவான ஜனநாயகக் கொள்கைக்கு முரணாக இருப்பதால், அதை உலகப் பிரச்னைகளில் ஒன்று என்றே கூற வேண்டும்.

அந்தந்த நாட்டைச் சேர்ந்த மக்களுக்கு உரிமையின்றி, அன்னியர்களுக்குச் சொந்தமாக இருந்து வரும் வடக்கு, மத்திய, கிழக்கு, தென்னாப்பிரிக்கா, கென்யா, கோல்ட் கோஸ்டு, நைஜீரியா, புகாந்தா, வடக்கு ரொடீஷியா, பிரிட்டிஷ் கயானா முதலிய பல இடங்களிலும் சுதந்திரப் போராட்டம் காரணமாக கொந்தளிப்பு உண்டாகியிருக்கிறது.

இந்தியாவில் அன்னிய நாடுகளுக்குச் சொந்தமாக உள்ள திட்டுப் பிரதேசங்களிலும் நிலைமை நாளுக்கு நாள் மோசமாகி வருகிறது.

எனவே, காங்கிரஸ் மகாசபையும், இந்திய சர்க்காரும் காலனிகளில் ஏற்பட்டுள்ள நிலைமையைக் கவலையுடனும் அக்கறையுடனும் கவனிக்க முற்பட்டிருப்பது அவசரமான காரியம்.

உலக சமாதானத்தையும் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் ஜனநாயக சுதந்திரத்தையும் பாதுகாக்க வேண்டுமாயின், காலனிகளில் வல்லரசுகள் செலுத்தி வரும் ஆதிக்கம் ஒழிய வேண்டும்.

நிற வேற்றுமையின்றிப் பல இனத்தாரிடையும் நேசமும் ஒத்துழைப்பும் நிலவக் கூடிய சமுதாயத்தை அமைக்க வேண்டும்.

அந்தந்த நாட்டில் உள்ள பெரும்பான்மையான மக்களுக்கு அரசாங்க நிர்வாகத்தில் முக்கியப் பங்கு இருக்க வேண்டும்.

சுயாட்சி 'டொமினியன்'கள் என்று சொல்லிக் கொண்டு பல நாடுகளிலும் சிறுபான்மையோரான வெள்ளையர்கள் ஆட்சி புரிய முற்படும் விபரீதம் மறைய வேண்டும்.

இதுதான், காங்கிரஸ் காரியக்கமிட்டியில் நிறைவேறியுள்ள தீர்மானத்தின் சாரம்.

பிரிட்டன், பிரான்ஸ், போர்ச்சுகல் முதலிய ஒவ்வொரு நாடும் காலனிகளில் தங்களுக்கு இருந்து வரும் ஆதிக்கத்தைக் கைவிட இஷ்டப்படவில்லை. அதனால் காலனிப் பிரச்னை ஐ. நா. சபையில் விவாதத்துக்கு வரும்போதெல்லாம் அவை ஒன்று சேர்ந்து நிற்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது.

தங்கள் கட்சியின் பலம் குன்றாமல் இருப்பதற்காக அமெரிக்கர்கள் காலனி வல்லரசுகளை ஆதரிக்கும்படியான விபரீதமும் ஏற்பட்டிருக்கிறது.

எனவே, இன்று ஜனநாயகத்தைப் பாதுகாப்பதாகக் கூறும் சில வல்லரசுகளின் ஆதிக்க ஆசையும் அநீதியான போக்குமே, உலக சமாதானத்துக்கும் ஜனநாயக தர்மத்துக்கும் பகையாக இருந்து வருகின்றன என்பதைக் காரியக் கமிட்டி உலகம் அறியச் சுட்டிக் காட்டியிருக்கிறது.

# மற்றொரு வரப்பிரசாதம்!

ராஜாஜி சர்க்காரால் தமிழ் மகாஜனங்களுக்கு இதுவரையில் எத்தனையோ நன்மைகள் ஏற்பட்டிருக்கின்றன. இனியும் எத்தனையோ நன்மைகள் ஏற்படப் போகின்றன என்பதற்குச் சென்னை மாகாணம் முழுதும் இப்போது அமுலுக்கு வந்துள்ள விவசாயிகளின் கடன் ஒத்தி வைப்பு அவசரச் சட்டம் சிறந்த சான்றாகும்.

சென்னை ராஜ்யத்தில் உள்ள கடன்பட்ட விவசாயிகளுக்கு மேற்படி கடனிலிருந்து ஒரு வருஷ காலத்துக்கு நிவாரணம் அளிப்பதே அவசரச் சட்டத்தின் நோக்கம். கடன் தொல்லையிலிருந்து விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளித்தால், கடவுள் கருணையால் இந்த ஆண்டில் பெய்துள்ள அமோகமான மழையை விவசாயிகள் நன்கு பயன்படுத்தி உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும்.

இந்த மாதம் ஆறாம் தேதியிலிருந்து ஒரு வருஷ காலத்துக்கு மேற்படி அவசரச் சட்டம் அமுலில் இருக்கும். அதுவரையில் விவசாயிகளிடமிருந்து கடன் வசூலுக்காகக் கடன்காரர்கள் கோர்ட்டில் வழக்குகள் தொடருவதோ, ஏற்கெனவே வாங்கப்பட்டுள்ள டிக்கிரிகளை நிறைவேற்றுவதோ தடை செய்யப்பட்டிருக்கிறது.

சென்ற ஆறு ஆண்டுகளாக மழையின்மையால் விவசாயிகள் ஏராளமாகக் கடன் பட்டிருக்கிறார்கள். இந்த ஆண்டில் மழை பெய்து சுபிட்ச நிலைமை ஏற்பட்டிருப்பதால், தங்கள் கடன் தொகைகளை வசூல் செய்ய இதுதான் சமயம் என்று கடன்காரர்கள் முன்வரக்கூடும். அதனால் விவசாயிகளுக்குக் கஷ்டமும் உணவு உற்பத்திக்குக் குந்தகமும் உண்டாகும். எனவே, உற்ற சமயத்தில் ராஜாஜி சர்க்கார் இத்தகைய அவசரச் சட்டம் பிரகடனம் செய்தது வரவேற்கத் தக்கது.

ராஜாஜி சர்க்கார் ஏற்கெனவே சில ஜில்லாக்களில் பண்ணையாள் சட்டம் கொண்டு வந்தது ஏழை விவசாயத் தொழிலாளர்களுக்கு வரப்பிரசாதமாக அமைந்தது. இப்போது அமுலுக்கு

வந்துள்ள கடன் ஒத்தி வைப்புச் சட்டத்தையும் விவசாயிகள் மற்றொரு வரப்பிரசாதமாகவே கருதுவார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

பிரஜா சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஸ்ரீ கே. ஆர். நல்லசிவம் எம். எல். ஏ. இந்த அவசரச் சட்டத்தை வரவேற்று அறிக்கை விட்டிருப்பதைப் பாராட்டுகிறோம்.

அதிகாரத்தில் உள்ள கட்சி நல்ல காரியம் செய்தபோதிலும், அதை எதிர்த்தே தீர வேண்டும் என்று எண்ணி எதிர்ப்புக்காகவே எதிர்ப்புச் செய்வது பெருந்தவறு என்பதைச் சமீபத்தில் சோஷலிஸ்ட் தலைவர்களில் ஒருவரான டாக்டர் லோஹியா எடுத்துக் காட்டியிருக்கிறார்.

காங்கிரஸ் சர்க்கார் ஏழைகளுக்குப் பாதுகாப்பு அளித்து உதவக்கூடிய திட்டங்களைக் கொண்டு வரும்போதெல்லாம் சோஷலிஸ்டு கட்சியார் அத்திட்டங்களை ஆதரிப்பதே முறை. சோஷலிஸ்ட் தலைவர்களின் நேர்மை நெறிக்கு இதுவே உகந்ததாகும். நல்ல காரியங்களில் காங்கிரஸை ஆதரித்தாலும் அதனால் சோஷலிஸ்டு கட்சிக்குப் பலக்குறைவு ஏற்படும் என்று எண்ணுவது பெருந்தவறு. விருப்பு வெறுப்பு இல்லாமல் அந்தந்தத் திட்டங்களை நன்கு ஆராய்ந்து ஆதரிக்கவோ, எதிர்க்கவோ வேண்டும். இத்தகைய நேர்மையான முறைதான் எந்த அரசியல் கட்சிக்கும் ஆக்கம் அளிக்கக் கூடியது.

## விடுதலை செய்வதே விவேகம்

டிசம்பர் மாதம் பதின்மூன்றும் தேதி அசோக் மேத்தா தினம் கொண்டாட வேண்டும் என்று பிரஜா சோஷலிஸ்டுக் கட்சியினர் அறிக்கை விடுத்திருக்கிறார்கள். பார்டி சத்தியாக்கிரக இயக்கம் சம்பந்தமாக அசோக் மேத்தா பதினொரு மாதம் தண்டனை அடைந்து சிறையில் இருப்பது யாவரும் அறிந்த விஷயம். அவரைப் பம்பாய் சர்க்கார் விடுதலை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டு வற்புறுத்துவதே மேற்படி தினம் கொண்டாடுவதன் நோக்கம் ஆகும்.

பம்பாய் மாகாணத்தில் சில இடங்களில் ஆயிரக்கணக்கான ஏக்கர் பூமி பயிர் செய்யாமல் கிடந்து வருகிறது. பெரிய நிலச் சுவான்தார்கள் அந்த ஏக்கர்களையும் தரிசாகவே போட்டு வைத்திருக்கிறார்கள். அவர்கள் அந்த நிலங்களைத் தாங்களும் பண்படுத்துவதில்லை; பிறர் பண்படுத்துவதற்கு அனுமதிப்பதுமில்லை. மேற்படி நிலங்களில் உழுது பயிரிட்டு அவற்றைப் பிரயோஜனகரமானவையாகச் செய்ய வேண்டும் என்று கோரியே பார்டி சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்டது. அச் சத்தியாக் கிரகத்தில் ஈடு பட்டவர்கள் சாத்வீக முறைகளையே கையாண்டு வந்திருக்கிறார்கள். எனவே, அந்த சத்தியாக்கிரகத்தின் நோக்கத்தை நியாய மற்றது என்று யாரும் கூற முடியாது. ஆயினும் பம்பாய் சர்க்கார் சட்ட முறைப்படி ஸ்ரீ அசோக் மேத்தா உள்படச் சத்தியாக் கிரகத்தில் ஈடுபட்ட பலர் மீதும் வழக்குத் தொடர்ந்ததில் அவர்கள் தண்டனை அடைந்தார்கள்.

உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டியது அத்தியாவசியமாக இருக்கும் இந்தச் சமயத்தில் தரிசு நிலங்களைப் பண்படுத்திப் பயிரிட வேண்டிய தன் அவசியத்தைப் பார்டி சத்தியாக்கிரஹ இயக்கம் சர்க்காரின் கவனத்துக்கும் மக்களின் கவனத்துக்கும் கொண்டு வந்திருக்கிறது. பின்னர், அது பூதான இயக்கமாகவும் மாறிவிட்டது. எனவே, சட்டத்தின் எழுத்தை மட்டும் கட்டிக் கொண்டு அழாமல் பம்பாய் சர்க்கார் ஸ்ரீ அசோக மேத்தாவையும் அவருடைய சகாக்களையும் விடுதலை செய்வதே விவேகம் ஆகும்.

## பயங்கர நோயைத் தடுக்க வேண்டும்

சில தினங்களுக்கு முன் இருபத்திரண்டு வயதான இளைஞன் கோடம்பாக்கத்துக்கு அருகில் மின்சார ரயில் வண்டிக்கு அடியில் விழுந்து தற்கொலை செய்து கொண்டான் என்ற செய்தி சென்னைப் பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது. அந்த இளைஞன் எஸ். எஸ். எல். ஸி பரீட்சையில் தேறியவன். சென்ற ஒரு வருஷ காலமாகத் தனக்கு வேலை ஒன்றும் கிடைக்காததாலேயே தற்கொலை செய்து கொள்வதாக அவன் எழுதி வைத்திருந்த கடிதத்திலிருந்து தெரிய வந்தது.

இத்தகைய சம்பவம் நிகழ்வது இந்திய சமூகத்துக்கே இழுக்காகும். எதிர்காலப் பிரஜைகளான இளைஞர்களிடையே தற்கொலை நோய் பரவுவதைக் காட்டிலும் பயங்கரமான விஷயம் வேறு இருக்க முடியாது. இன்ப துன்பங்களையே அறியாமல் வாழ்க்கையின் முதல் படியில் இருக்கும் இளைஞர்கள், பரீட்சை தேறவில்லை அல்லது வேலை கிடைக்கவில்லை என்ற ஒரே காரணத்துக்காக இந்த உலக வாழ்வை முடித்துக் கொள்வது பரிதபிக்கத் தக்கது.

இத்தகைய நிலைமைக்கு மூல காரணம் மெக்காலே தொடங்கி வைத்த கல்வி முறைதான். தொழில் துறைகளில் எவ்விதப் பயிற்சியும் அளிக்காத தற்போதையக் கல்வி முறை மாணவர்களை அவ்வாறு தைரியத்தையும் தன்னம்பிக்கையையும் இழக்கும்படி செய்து விடுகிறது. தற்கால மெக்காலே முறைப் பள்ளிக்கூடங்களுக்குப் போகாத எந்த இளைஞனும் இம்மாதிரி நிராசை அடைந்து தற்கொலை செய்து கொள்ள மாட்டான். ஒரு வேலை இல்லாவிட்டால் இன்னொரு வேலை செய்து பிழைத்துக் கொள்ளலாம் என்ற மனோ திடத்தைப் படிக்காத வாலிபர்களிடம் நிச்சயம் காணலாம்.

இச் சந்தர்ப்பத்தில், தற்போதையக் கல்வி முறையை அடியோடு சீர்திருத்தி அமைக்க வேண்டும் என்று புது டில்லியில் நடந்த காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேறியிருப்பது வரவேற்கத் தக்கது. எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் ஆதாரக் கல்வி முறையை முக்கியமாகக் கொண்டு கல்வி முறையை மாற்றி அமைக்க வேண்டும் என்று காரியக் கமிட்டி யோசனை கூறியிருக்கிறது.

இந்த யோசனை கிரியாம்சையில் நிறைவேறுவதற்கு, சென்னை மாகாணத்தில் அமுலுக்கு வந்துள்ள புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் வழி காட்டியாக இருக்கும் என்று நம்புகிறோம்.

ஆனால் கல்வித் திட்டம் மாறிச் சமூக நிலை சீர்படுவதற்கு வெகு காலமாகும். அதுவரையில், தற்போதைய கல்வி முறையினால் பெருகி வரும் வேலையில்லாத் திண்டாட்டம் என்னும் பயங்கர நோயைத் தடுக்கப் பெருமுயற்சி செய்யவேண்டும். மத்திய சர்க்காரும் மாகாண சர்க்கார்களும் இந்தப் பிரச்னைக்கு முக்கியத்துவம் அளித்து உடனடியாக உதவக்கூடிய திட்டங்களை வகுக்க வேண்டும்.

# ஸிரோலின்




உங்கள்
இருமலின்
காரணத்தை
அகற்றுகிறது

உங்கள் பற்களுக்கும்
ஈறுகளுக்கும் ஏற்றது




**Neem**
**TOOTH PASTE**

## நீம் டூத் பேஸ்ட்

இயற்கையான க்ளோரபிலுடன் கெடுதலை எதிர்க்கும் சக்தி, பூச்சியை அழிக்கும் வன்மை மற்றும் அழிவுச் சக்திகளை ஒழிக்கும் தன்மையைப் பெற்றிருப்பதுடன் பல் வைத்தியம் சம்பந்தப்பட்ட நூதன முறை ஆரோக்கிய விதிகளையும்கொண்டது.




**Margofrice**
*Neem Dental Powder*

மார்கோப்ரைஸ்
பற்பொடியை விரும்புகிற
வர்களுக்கு இது ஏற்றது.
நீம் பற்பசையில் இருப்
பவை இதிலும் உள்ளன.

*CALCHEMICO PRODUCTS*

மதராஸ் ஆபீஸ்:
5/149, பிராட்வே, மதராஸ்-1



## ஆரோக்யமான சருமத்திற்கும், இளமையான முகத் தோற்றத்திற்கும்

# காந்தி

டாய்லட் சோப்



அது சிறந்தது — அதுவே ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் தயாரிப்பு

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 59

## சகுனத் தடை

மரத்தடியில் ஒதுங்கி நின்ற படகைப் பார்த்ததும் வந்தியத்தேவன் அதிர்ஷ்ட தேவதை மறுபடியும் தன் பக்கம் வந்திருப்பதாக எண்ணி உற்சாகம் அடைந்தான். தனக்குப் படகோட்டத் தெரியாவிட்டாலும், கருத்திருமன் படகோட்டுவதையே தொழிலாகக் கொண்டவன். அவனுடைய உதவியுடன் படகைத் தள்ளிக் கொண்டு வடவாற்று ஓரோட்டத்தோடு சென்றால், அந்த ஆற்று வெள்ளம் கோடிக்கரைக்குப் பாதி வழி வரையில் கொண்டு சேர்த்து விடும்.

"பார்த்தாயா, கருத்திருமா! இந்தப் படகு ஆற்றில் அமிழாமல் மிதந்து வந்து நமக்காகவே காத்திருக்கிறது. உன்னுடைய படகோட்டும் திறமையைக் கொஞ்சம் காட்டினாயானால், பொழுது விடிவதற்குள் பாதி தூரம் போய்விடலாம். அப்புறம் குதிரைமேல் வருகிறவர்கள் கூட நம்மைப் பிடிக்க முடியாது!" என்றான் வந்தியத் தேவன்.

கருத்திருமன் சிறிது சந்தேகக் கண்ணுடன் சுற்று முற்றும் பார்த்தான். மரத்துக்குப் பக்கத்தில் ஆற்றங்கரையில் மதிள் சுவரோரமாக மண்டி வளர்ந்திருந்த புதர்களுக்கு மத்தியில் ஏதோ அசைவது போலத் தோன்றியது.

கருத்திருமன் ஒரு சிறிய கல்லைத் தூக்கிப் புதர்களுக்கு மத்தியில் எறிந்தான். அங்கிருந்து ஒரு பூனை துள்ளிப் பாய்ந்து வந்து படகில் ஏறிக் கொண்டது.

வந்தியத் தேவன் சிரித்துக் கொண்டே "படகோட்டி! என்னை விடப் பெரிய தைரியசாலியாயிருக்கிறாயே?" என்று சொல்லி, இன்னொரு சிறிய கல்லைத் தூக்கிப் படகுக்குள் விட்டெறிந்தான்.

பூனை மறுபடி படகிலிருந்து வெளியே துள்ளிப் பாய்ந்து இவர்களை நோக்கி ஓடி வந்து இரண்டு பேருக்கும் இடையில் புகுந்து ஓடியது.

இப்போது வந்தியத் தேவன் பிரண்டு இரண்டடி பின்னால் எடுத்து வைத்தான்.

"நீ ஒன்றும் என்னைவிடத் தீரனாகத் தோன்றவில்லையே?" என்று ஏளனமாகக் கூறினான் கருத்திருமன்.

"எனக்குப் பூனை என்றால் பயம். அது என்மேலே பட்டாலே, உடம்பெல்லாம் மயிர்க்கூச்சு உண்டாகும். நல்லவேளை! அதுதான் போய் விட்டதே! வா, போகலாம்!" என்றான் வந்தியத்தேவன்.

"பூனை என்மேலே விழுந்தால் கூட எனக்குப் பயம் ஒன்றுமில்லை; ஆனால் குறுக்கே போனால்தான் பயம். சகுனத் தடை!" என்றான் கருத்திருமன்.

"சகுனமாவது, தடையாவது?" என்று சொல்லிக் கொண்டே வந்தியத் தேவன் கருத்திருமன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய்ப் படகில் ஏறினான்.

கருத்திருமனும் படகின் ஒரு மூலைக்குச் சென்று அதை மரங்களின் வேர்களிலிருந்து தள்ளிவிட முயன்றான்.

படகு சிறிது நகர்ந்ததோ, இல்லையோ, சட சடவென்று நாலுபேர் துள்ளிப் பாய்ந்து ஓடி வந்து கண்மூடித் திறக்கும் நேரத்தில் படகில் ஏறிக்கொண்டார்கள்.

அவர்களில் இரண்டு பேர் வந்தியத்தேவன் மீது பாய்ந்து அவனைப் படகிற்குள்ளே தள்ளிப் படகின் குறுக்குச் சட்டங்களோடு சேர்த்துக் கட்டினார்கள்.

மற்ற இருவரும் வேல் பிடித்த கையுடன் கருத்திருமன் அருகில் சென்று இருபுறமும் காவலாக நின்றார்கள்.

வந்த நால்வரில் தலைவனாகத் தோன்றியவன் பாதாளச் சிறை வாசலிலிருந்து தங்களைத் தொடர்ந்து வந்த பருமனான மனிதன்தான் என்பதை வந்தியத்தேவன் கண்டு கொண்டான். சுரங்க வழியின் வாசலருகில் அவன் அதற்குள்ளே படகிலே வந்து காத்திருந்ததை எண்ணி வியந்தான். அவன் சாதாரண காவலன் அல்ல, மிகக் கைதேர்ந்த ஒற்றனாயிருக்க வேண்டும் என்று தீர்மானித்தான். அவன் யாராயிருக்கும், எங்கோ பார்த்த ஞாபகமாக இருக்கிறதே என்று எண்ணிக் கொண்டிருக்கும் போதே "அவனுடைய பேச்சுக் குரல் காதில் விழுந்தது.

கருத்திருமனைப் பார்த்து அக் காவலன் "அப்பனே! இத்தனை வருஷம் சிறையில் கழித்து விட்டு வெளி வந்திருக்கிறாய். உடனே இந்தத் துன்மதியாளன் வார்த்தையைக் கேட்டு ஏன் ஓடப் பார்த்தாய்? போனாற் போகட்டும். உன்னை மறுபடியும் கட்டிட போட மனமில்லை. நான் சொல்கிறதைக் கேட்டு அதன்படி செய்தாயானால் உனக்குத் தீங்கு ஒன்றும் நேராது!" என்றான்.

ஓடக்காரனும் "அப்படியே, ஐயா! முதன் மந்திரி எனக்கு விடுதலை அளிக்க ஆள் அனுப்பினார். ஆனால் இந்த மூடன் பேச்சைக் கேட்டு நான் கெட்டுப் போனேன். இனி நீங்கள் சொல்கிறபடி செய்கிறேன். என்னைப் பாதாளச் சிறைக்கு மட்டும் மறுபடி அனுப்பி விடாதீர்கள்!" என்றான்.

"ஆமாம், ஆமாம்! முதன் மந்திரி உன்னிடம் சில விவரங்கள் கேட்க விரும்புகிறார். அவற்றை நீ உண்மையாகச் சொல்லி விட்டால், உன்னைப் பாதாளச் சிறைக்கு அனுப்ப மாட்டார். வேண்டிய பொன்னும் மணியும் பொருளும் பரிசு கொடுத்து அனுப்புவார். நீங்கள் எங்கே போவதென்று புறப்பட்டீர்கள்?"

"ஈழ நாட்டுக்குப் போவதென்று புறப்பட்டோம்."

"அழகாயிருக்கிறது. முதன் மந்திரியை ஏமாற்றி விட்டு, வேளாரின் காவலை மீறி விட்டு, அவ்வளவு தூரம் போய் விடலாம் என்று எண்ணினீர்களா? ஆனால் இந்த முரட்டு வாலிபன் அம்மாதிரி யோசனை சொல்லக் கூடியவன்தான். முன்னொரு தடவை, சின்னப் பழுவேட்டரையரின் காவலுக்குத் தப்பி ஓடியவன் அல்லவா? போகட்டும்; இப்போது படகை ஆற்று நீர் ஓட்டத்துக்கு எதிராகச் செலுத்த வேண்டும். என்னுடன் வந்தவர்களில் ஒருவனுக்குத்தான் படகு செலுத்தத் தெரியும். அவனும்



கற்றுக் குட்டி. வரும்போது நாங்கள் நீரோட்டத்தோடு வந்தபடியால், தட்டுத் தடுமாறி வந்து விட்டோம். இப்போது நீ கொஞ்சம் உன் கைவரிசையைக் காட்ட வேண்டும். அக்கரைக்குச் சமீபமாகப் போய் அங்கிருந்து வடக்குக் கோட்டை வாசலை நோக்கிப் படகைச் செலுத்து, பார்க்கலாம்!"

"அக்கரை சென்று அங்கிருந்து நடந்து போய் விடலாமே, ஐயா! நீரோட்டம் வெகு வேகமாகச் செல்கிறது. எதிர்முகமாக அதிக தூரம் படகு செலுத்துவது கஷ்டமாயிற்றே?"

"அக்கரையில் இறங்கினால் இந்த முரட்டு வாலிபன் மறுபடியும் ஏதாவது தகராறு செய்வான்! ஆகையால் ஆற்றோடுதான் மேலே போக வேண்டும்!" என்றான் காவலர் தலைவன்.

படகைக் கருத்திருமனும் மற்றொருவனும் தள்ளத் தொடங்கினார்கள்.

காவலர் தலைவன் வந்தியத்தேவனின் அருகில் வந்து, "அப்பனே! உன் வேலைத்



தனத்தை மறுபடியும் காட்டப் பார்க்காதே!" என்றான்.

"ஐயா! என்னைப் பற்றி உமக்கு ரொம்பத் தெரியும் போலிருக்கிறதே!" என்றான் வந்தியத்தேவன்.

"ஏன் தெரியாது? வைத்தியர் மகனைச் சிறையிலே உனக்குப் பதிலாக அடைத்து விட்டு நீ வெளியிலே வந்ததைத்தான் பார்த்துக் கொண்டிருந்தேனே? அப்புறம் எங்களை ஏமாற்றி விட்டு ஓடிப் போகப் பார்த்தாய் நீ!"

வந்தியத்தேவன் மிக ஆச்சரியப்பட்டவனைப்போல், "ஐயா! என்னைவிடக் கெட்டிக்காரர் தாங்கள்! பாதாளச் சிறையில் நடந்ததை ஒருவரும் கவனிக்கவில்லை என்று நினைத்தேன்!" என்றான்.

"தம்பி! எங்கள் முதன் மந்திரியின் கண்களும் காதுகளும் எட்டாத இடம் சோழ சாம்ராஜ்யத்தில் எங்கும் இல்லை. அவை ஈழ நாட்டிலும் உண்டு; காஞ்சியிலும் உண்டு; கடம்பூர் மாளிகையிலும் உண்டு; பாதாளச் சிறையிலும் உண்டு. அந்த வைத்தியர் மகன் பினாகபாணி சுத்த மூடன் என்பது முதன் மந்திரிக்குத் தெரியும். அதனாலேதான், அவன் பின்னால் என்னையும் அனுப்பி வைத்தார்!"

"நான் இந்த வழியாக வெளியேறுவேன் என்பதும் முதன் மந்திரிக்குத் தெரிந்திருந்தது போலும். அவருடைய கண்களும் காதுகளும் அதிசயமானவை தான். அப்படியானால், நான் நிரபராதி என்பதும், என்னைப் பாதாளச் சிறையில் அடைத்தது தவறு என்பதும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டுமே?"

"அது முதன் மந்திரியின் பொறுப்பு அல்ல. நீ குற்றவாளியா, இல்லையா என்பதைத் தீர்மானிப்பது சக்கரவர்த்தியின் பொறுப்பு. நீ பாதாளச் சிறையிலிருந்து தப்ப முயன்றதற்குத் தண்டனை கொடுப்பது கொடும்பாளூர் பெரிய வேளாரின் பொறுப்பு" என்றான் காவலன்.

"ஐயா! என்னை இப்போது எங்கே கொண்டு போகிறீர்கள்?"

"முதலில் கொடும்பாளூர் வேளாரிடம் கொண்டு போகிறேன். அவர் வடக்குக் கோட்டை வாசலில் காத்திருக்கிறார்."

"எனக்காகவா பெரிய வேளார் காத்துக் கொண்டிருக்கிறார்?"

"ஆகா! உன் கர்வத்தைப் பார்! தென் திசை மாதண்ட நாயகரும் சோழ நாட்டுக் குறுநில மன்னர்களில் முதல் மரியாதைக் குரிய மன்னரும் சோழ குலத்தின் பரம்பரைத் துணைவரும் பாண்டிய குலத்தை வேரோடு களைந்தவரும்

ஈழங் கொண்ட வீராதி வீரருமான கொடும்பாளூர் வேளார் சேனாதிபதி பூதி விக்கிரமகேசரி உனக்காகக் கோட்டை வாசலில் காத்துக் கொண்டிருப்பார் என்று நினைத்தாயா?''

"பின்னே, யாருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்?''

"பழுவேட்டரையர்களையும் மற்றும் திருப்புறம்பயத்தில் கூடியிருந்த சிற்றரசர்களையும் அழைத்துக்கொண்டு பார்த்திபேந்திரன் வருகிறான்...''

"பெரிய பழுவேட்டரையர் கூடவா?''

"ஆமாம்; அவர் கூடத்தான். இளவரசர் கரிகாலரின் மரணத்தைப் பற்றி அவருக்கு உண்மை தெரியுமாம். அவர் வந்த பிறகு சக்கரவர்த்தியின் முன்னிலையில் விசாரணை நடைபெறும். நீ குற்றவாளி அல்லவென்றால், அப்போது அதை நிரூபிக்க வேண்டும்.''

வந்தியத்தேவன் இதைக் கேட்டுப் பெருங் கவலையில் ஆழ்ந்தான். பழுவேட்டரையர்களும் பார்த்திபேந்திரனும் சேர்ந்து தன் பேரிலேதான் குற்றத்தைச் சுமத்துவார்கள். கடவுளே! அந்தக் குற்றச் சாட்டுடனே சக்கரவர்த்தியையும் இளவரசர் அருள்மொழி வர்மரையும் எப்படி நிமிர்ந்து பார்ப்பது? என்ன சாட்சியத்தைக் காட்டி நான் குற்றவாளி அல்லவென்று நிரூபிக்க முடியும்?

"ஐயா! நான் தங்களுக்கு ஒரு தீங்கும் செய்யவில்லையே? என்னைத் தப்பிப் போகும்படி விட்டு விடுங்கள்! உண்மையில் நான் குற்றவாளி அல்ல. காலமான இளவரசருக்கு அத்தியந்த நண்பனுயிருந்தவன். சந்தர்ப்ப வசத்தினால் இத்தகைய பயங்கரக் குற்றம் சாட்டப்பட்டேன். தாங்கள் முதன் மந்திரியின் சேவகர். சிறையிலிருந்த பைத்தியக்காரனைக் கொண்டு வரும்படிதானே தங்களுக்கு முதன் மந்திரி கட்டளையிட்டார்? இவனை அழைத்துப் போங்கள். என்னை விட்டு விடுங்கள்! உங்களுக்குப் புண்ணியம் உண்டு!'' என்று வந்தியத்தேவன் இரக்கமாகக் கேட்டான்.

"உன்னை விட்டு விட்டால் எனக்கு என்ன தருவாய்?'' என்றான் காவலன்.

"பின்னால் சமயம் வரும்போது பதிலுக்குப் பதில் உதவி செய்வேன்.''

"அப்படிச் சமயம் வரப் போவதுமில்லை; வந்தாலும் உன் உதவி எனக்குத் தேவையும் இல்லை. இப்போது உடனே என்ன தருவாய் என்று சொல்லு!''

வந்தியத் தேவனுக்கு அவனுடைய அரைக் கச்சில் கட்டிக் கொண்டிருந்த பொற் காசுகளின் நினைவு வந்தது.

"உம்முடைய இரண்டு கைகளும் நிறையும்படி பொற்காசுகள் தருவேன்.''

"ஆகா! அப்படியா? பொற் காசுகளா? எங்கே காண்பி!'' என்றான் காவலன்.

"கொஞ்சம் என் கட்டுக்களைத் தளர்த்தி விடு! அரைக்கச்சிலிருக்கிறது; எடுத்துக் காட்டுகிறேன்!'' என்றான் வந்தியத் தேவன்.

"மறுபடி உன் வேலைத்தனத்தை மட்டும் காட்டி விடாதே!'' என்று சொல்லிக் கொண்டே காவலன் குனிந்து வந்தியத் தேவனுடைய கட்டுக்களைச் சிறிது தளர்த்தி விட்டான்.

வந்தியத்தேவன் அந்தக் காவலனின் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே அரைக் கச்சை அவிழ்த்துப் பொற் காசுகளை எடுத்துக் கொடுத்தான்.

அக் காசுகளைக் காவலன் கை நிறைய வைத்துக்கொண்டு "தம்பி! இக் காசுகளைப் பழுவேட்டரையரின் பொக்கிஷத்திலிருந்து எடுத்து வந்தாயா? அல்லது வார்ப்படச் சாலையிலிருந்தே அடித்துக்கொண்டு வந்தாயா? உன் பேரில் இப்போது மூன்று குற்றங்கள் ஆயின. கொலைக் குற்றம் ஒன்று, சிறையிலிருந்து தப்பிய குற்றம் ஒன்று, இராஜ்ய பொக்கிஷத்திலிருந்து திருடிய குற்றம் ஒன்று. ஆக மூன்று குற்றங்கள். ஒவ்வொரு குற்றத்துக்காகவும் உன்னைத் தனித் தனியே கழுவில் ஏற்றலாம்'' என்றான்.

"ஐயா! சோழ ராஜ்யத்துக்கு நான் எத்தனையோ சேவைகள் செய்திருக்கிறேன். பலமுறை தூது சென்றேன். என் உயிரைக் கொடுத்துக் கரிகாலரின் உயிரைக் காப்பாற்ற முயன்றேன். இந்தச் சில பொற்காசுகளை என் சேவைக்குக் கூலியாகப் பெற எனக்கு உரிமை உண்டு. அதுவும் பிரயாண வசதிக்காகவே எடுத்துக் கொண்டேன்'' என்றான் வந்தியத்தேவன்.

"இதையெல்லாம் நீ உன்னை விசாரணை செய்யும்போது சொல்லிக் கொள்ளு!'' என்றான் காவலன்.

"அப்படியானால், நீர் என்னைக் கட்டவிழ்த்து விடப் போவதில்லையா?'' என்று கேட்டான் வந்தியத்தேவன்.

"கிழக்கில் உதிக்கும் சூரியன் மேற்கே உதித்தாலும் திருமாலைக் காட்டிலும் பரமசிவன் பெரிய தெய்வம் என்று ஏற்பட்டாலும், நான் சில பொற் காசுகளுக்

காக இராஜ்யத் துரோகம் செய்ய மாட்டேன்'' என்றான் காவலன்.

அருத்திருமன் என்ன செய்கிறான் என்று வந்தியத்தேவன் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டான். அவன் தன்னை ஆர்வத்துடன் நோக்கிக் கொண்டு சமிக்ஞையை எதிர்பார்த் திருந்தவனுக்குத் தோன்றியதைக் கவனித்தான்.

உடனே அவ் வீர வாலிபன் ஏற்கெனவே தளர்த்தி விட்டிருந்த கட்டுக்களை இன்னும் சிறிது தளர்த்திக் கொண்டு சட்டென்று அந்தக் காவலனுடைய முகத்திலிருந்த மீசையையும் தலைக் கட்டையும் பிடித்து இழுத்தான்.

அவை அவன் கையோடு வந்து விட்டன. சாக்ஷாத் ஆழ்வார்க்கடியான் காட்சி அளித்தான்.

"வேஷதாரி வைஷ்ணவனே! நீதானா?" என்றான் வந்தியத்தேவன்.

ஆழ்வார்க்கடியான் தனது மீசையையும் தலைப்பாகையையும் காப்பாற்றிக் கொள்ள முயன்றபோது அவன் கையிலிருந்த பொற்காசுகள் சிதறி விழுந்தன.

வந்தியத்தேவன் ஒரு கொடியில் தன் கட்டுக்களிலிருந்து விடுபட்டு ஆழ்வார்க்கடியானைக் கீழே தள்ளினான்.

சற்று முன் தன்னைக் கட்டியிருந்த கயிற்றைப் போட்டு ஆழ்வார்க்கடியானைப் படகின் குறுக்குச் சட்டங்களோடு சேர்த்துக் கட்டினான்.

அவன் அரையில் தரித்திருந்த வாளை அதன் உறையிலிருந்து இழுத்து எடுத்துக் கையில் ஏந்திக் கொண்டான்.

வந்தியத்தேவன் இச்செயல்களில் ஈடுபட்டிருக்கையில் கருத்திருமன் சும்மா இருக்கவில்லை. அவன் அருகில் நின்ற காவலனைத் திடீரென்று தாக்கி ஆற்று வெள்ளத்தில் வீழ்த்தினான். அவன் நதி வெள்ளத்தில் போராடலானான்.

மற்ற இருவரில் ஒருவன் படகோட்டியை நோக்கியும் இன்னொருவன் வந்தியத்தேவனிடத்திலும் நெருங்கினார்கள். இருவரும் பயத்துடன் தயங்கித் தயங்கியே வந்தார்கள். வந்தியத்தேவன் அவனை நோக்கி வாளை வீசிக்கொண்டு முன்னால் சென்றதும் அவ்வீரன் தானாகவே வெள்ளத்தில் குதித்து விட்டான்.

இன்னொருவனை இதற்குள் கருத்திருமன் தன் கையிலிருந்த துடுப்பினால் ஓங்கி அடித்துப் படகில் வீழ்த்தினான்.

இருவரும் சேர்ந்து அவனையும் குறுக்குச் சட்டத்தில் கட்டிப் போட்டார்கள்.

படகு நதி வெள்ளத்தோடு போய்க் கொண்டிருந்தது. வெள்ளத்தில் விழுந்த இருவரும் அக்கரையை நோக்கி நீந்திச் செல்ல முயன்று கொண்டிருந்தார்கள்.

வந்தியத் தேவன் ஆழ்வார்க்கடியான் அருகில் சென்று "வீர வைஷ்ணவ சிகாமணியே! இப்போது என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டான்.

"என்னத்தைச் சொல்வது? எல்லாம் நாராயண மூர்த்தியின் செயல். கட்டுகிறவனும் அவன்; கட்டப்படுகிறவனும் அவன். தள்ளுகிறவனும் அவன்; தள்ளப்படுகிறவனும் அவன்! தூணிலும் உள்ளான்; துரும்பிலும் உள்ளான்; உன் கை வாளிலும் உள்ளான்; என் தோளிலும் உள்ளான்!"

"அப்படியானால், இந்த ஆற்று வெள்ளத்திலும் உள்ளான்! உன்னைக் கட்டித் தூக்கி இந்த வெள்ளத்தில் போட்டு விடலாம் அல்லவா?"

"பிரஹலாதனைக் கல்லுடன் சேர்த்துக் கட்டிக் கடலில் போட்டார்கள். அவனை நாராயணமூர்த்தி காப்பாற்றிக் கரை சேர்க்கவில்லையா? அப்படிப் பகவான் வந்து என்னைக் கரை சேர்க்க முடியா விட்டால், சாக்ஷாத் வைகுண்டத்துக்கு நேரே அழைத்துக் கொள்கிறார்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

இதைக் கேட்ட வந்தியத் தேவன் சிறிது யோசித்து விட்டு, "இதோ பார்! நீ சில சமயம் என் உயிரைக் காப்பாற்றியிருக்கிறாய். என்ன எண்ணத்துடன் காப்பாற்றினாயோ, தெரியாது! எப்படியிருந்தாலும், உன்னை நான் கொல்ல விரும்பவில்லை. ஆயினும், உன் உயிரைக் காப்பாற்றுவதாயிருந்தால், எனக்கு ஓர் உதவி நீ செய்ய வேண்டும்!" என்றான்.

"அப்பனே! பரோபகாரம் இதம் சரீரம் என்ற கொள்கை உடையவன். என்ன உதவி உனக்குத் தேவையோ, கேள்! கட்டை அவிழ்த்து விட்டால் செய்கிறேன்" என்றான் திருமலை.

"உன் சரீரத்தினால் உதவி எனக்கு இப்போது தேவையில்லை. எனக்கும் இவனுக்கும் இரண்டு குதிரைகள் வேண்டும். எதற்காக என்று கேட்கிறாயா? தப்பிச் செல்லுவதற்காகத்தான்! அதற்கு ஏதேனும் வழி சொன்னால், உன்னை இப்படியே படகில் மிதக்க விட்டு விட்டு நாங்கள் கரையில் இறங்கி விடுகிறோம். படகு கரையில் ஒதுங்குமிடத்தில் நீ உன் சாமர்த்தியத்தை உபயோகித்துக் கொண்டு பிழைத்துக் கொள்!"

"என்னால் முடிந்த உதவியைக் கேட்கிறாயே. அதைப் பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன்."

"குதிரைகள் கிடைக்க எனக்கு வழி சொல்ல முடியுமா?"

"முடியும்! உங்கள் இரண்டு பேருக்கும் இரண்டு குதிரைகள் இருக்குமிடம் எனக்குத் தெரியும்... வாணி அம்மை வீடு உனக்குத் தெரியும் அல்லவா?"

"எந்த வாணி அம்மை?"

"தஞ்சைத் தளிக் குளத்தார் ஆலயத்துக்குப் புஷ்ப கைங்கரியம் செய்யும் வாணி அம்மை. பிறவி ஊமை. சேந்தன் அமுதனின் தாயார்."

இவ்வாறு ஆழ்வார்க்கடியான் சொல்லிக் கொண்டிருந்தபோது கருத்திருமன் அருகில் நெருங்கி ஆவலாகக் கேட்டான்.

"தெரியும்; அந்த வீடு எனக்குத் தெரியும். நந்தவனத்தில் இருக்கிறது."

"அங்கே இரண்டு குதிரைகள் இந்தக் கணத்தில் இருக்கின்றன."

"எப்படி?"

"ஒன்று, என் குதிரை. வாணி அம்மையின் குடிசைக் கருகில் அதைக் கட்டிப் போட்டுவிட்டு இந்தப் படகில் ஏறி வந்தேன். இன்னொன்று, சேந்தன் அமுதன் ஏறி வந்த குதிரை. பாவம்! அமுதன் குதிரை ஏறி வழக்கமில்லாதவன். வழியில் அந்த முரட்டுக் குதிரை அவனைக் கீழே தள்ளி விட்டது. முன்னமே சுரத்தினால் பலவீன மடைந்திருந்தான். கீழே விழுந்த அதிர்ச்சியால் மறுபடியும் படுத்து விட்டான். பிழைத்தால் புனர்ஜன்மம் என்று சொல்கிறார்கள். ஆகையால் குதிரை இனி அவனுக்குத் தேவை யிராது."

வந்தியத்தேவன் மிக்க கவலையுடன் "அவனைக் கவனிக்க அங்கே யார் இருக்கிறார்கள்?" என்றான்.

"அவனுடைய தாயாரும் பூங்குழலியும் இருக்கிறார்கள்!" என்றான் திருமலை.

கருத்திருமன் திடீர் என்று அச் சம்பாஷணையில் பிரவேசித்து "எந்தத் தாயார்?" என்று கேட்டான்.

இருவரும் ஒரு கணம் அவனை ஏறிட்டுப் பார்த்தார்கள்.

"என்ன கேட்டாய்?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"சேந்தன் அமுதன் உயிருக்கு அபாயம் என்னும் செய்தி பெரிய பிராட்டி செம்பியன்மா தேவிக்குத் தெரியுமா என்று கேட்டேன்."

"ஆமாம்; செம்பியன் மாதேவிதான் அவர்களுக்குப் புஷ்ப கைங்கரியத்துக்கு மானியம் கொடுத்து ஆதரித்து வருகிறார். ஆனால் அரண்மனையைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் இப்போது கரிகாலர் மரணத்தினால் ஏற்பட்ட துயரத்தில் மூழ்கிக் கிடக்கிறார்களே? அமுதனை எங்கே கவனிக்கப் போகிறார்கள்?"

வந்தியத் தேவன் கருத்திருமனைப் பார்த்து, "நீ என்ன சொல்கிறாய்? சேந்தன் அமுதனையும் அவன் அன்னையையும் போய்ப் பார்த்து விட்டுப் போவோமா?" என்றான்.

கருத்திருமன் தலையை அசைத்துத் தன் சம்மதத்தைத் தெரிவித்தான்.

"அப்படியானால், படகைக் கரையை நோக்கிச் செலுத்து!" என்று வந்தியத் தேவன் கூறி விட்டு, ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "வைஷ்ணவனே! இதில் ஏதாவது உன் சூழ்ச்சி தந்திரத்தைக் காண்பித்திருந்தாயோ, பார்த்துக்கொள்! என்னுடைய கதி எப்படியானாலும் உன்னைக் கைலாஸத்துக்கு அனுப்பி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பேன்!" என்றான்.

"வேண்டாம், தம்பி! வேண்டாம்! உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். நித்திய சூரிகள் புடைசூழ ஸ்ரீமந் நாராயணமூர்த்தி மகாலக்ஷ்மி சமேதமாக வீற்றிருக்கும் வைகுண்டத்துக்கு என்னை அனுப்பி வை!" என்றான் வைஷ்ணவன்.

## அத்தியாயம் 60

# அமுதனின் கவலை

நந்தவனத்து நடுவில் இருந்த குடிலில் சேந்தன் அமுதன் நோய்ப்பட்டுப் படுத்திருந்தான். பூங்குழலி அவனுக்கு அன்புடன் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். வாணி அம்மை பாகம் செய்து கொடுத்த கஞ்சியைக் கொண்டு வந்து அவனை அருந்தும்படி செய்தாள்.

சற்று முன்னாலேதான் சுந்தர சோழ ஆதுரசாலையி லிருந்து வைத்தியர் வந்து சேந்தன் அமுதனைப் பார்த்து விட்டுப் போயிருந்தார். போகும்போது அவரிடம் பூங்குழலி தனியாக விசாரித்தாள். அமுதனுக்கு எப்படி யிருக்கிறது,—பிழைத்து எழுந்து விடுவானா என்று கேட்டாள்.

"முன்னமே ஒரு தடவை காய்ச்சல் வந்து பலவீனமாயிருந்தான். அத்துடன் நீண்ட பிரயாணம் போய்த் திரும்பிக் குதிரை மேலிருந்தும் கீழே விழுந்திருக்கிறான். அதனாலெல்லாம் பாதகமில்லை. ஆனால் அவன் மனத்தில் ஏதோ கவலை வைத்துக் கொண்டிருக்கிறான். அதனாலே தான் உடம்பு குணமடைவது தடைப் படுகிறது!" என்றார் வைத்தியர்.

இதை உள்ளத்தில் வைத்துக்கொண்டு பூங்குழலி, "அமுதா! உன் மனத்தில் என்ன கவலை? ஏன் உற்சாகமே இல்லாமலிருக்கிறாய்? உன் மனக் கவலையினால்தான் உன் உடம்பு குணப்படுவது தாமதமாகிறது என்று வைத்தியர் சொல்கிறாரே?" என்றாள்.

அமுதன், "பூங்குழலி! உண்மையைச் சொல்லட்டுமா? அல்லது மனத்தில் ஒன்று வைத்துக் கொண்டு வெளியில் ஒன்று பேசட்டுமா?" என்றான்.

பூங்குழலி, "நான் அப்படி உள்ளொன்று புறமொன்றுமாகப் பேசுகிறவள் என்று சுட்டிக் காட்டுகிறாயா?" என்று கேட்டாள்.

"பூங்குழலி! உன்னுடன் பேசுவதே அபாயகரமாயிருக்கிறது. நீ பேசாமலிருந்தால் உன் முகத்தைப் பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருப்பேன்."

"என் அத்தைமார்களைப்போல் நானும் ஊமையாய்ப் பிறந்திருந்தால் உனக்குச் சந்தோஷமாயிருக்கும் அல்லவா?"

"ஒரு நாளும் இல்லை. நீ பாடும்போது நான் அடையும் ஆனந்தத்துக்கு அளவேயில்லை. வெறும் பேச்சிலே என்ன இருக்கிறது? ஒரு தேவாரப் பண் பாடு!"

"அதெல்லாம் முடியாது. உன் மனத்தில் என்ன கவலை என்பதைச் சொன்னால்தான் பாடுவேன்."

"அப்படியானால் சொல்கிறேன், கேள்! என்னுடைய கவலையெல்லாம் என் உடம்பு சீக்கிரமாகக் குணமாகி விடப் போகிறதே என்றுதான்."

"இது என்ன இப்படிச் சொல்லுகிறாய்? உனக்கு உடம்பு குணமாக வேண்டும் என்று நான் எல்லாத் தெய்வங்களையும் வேண்டிக் கொண்டிருக்கிறேனே? நீ குணமாகி விடுமே என்று கவலைப்படுவது ஏன்?"

"என் உடம்பு குணமாகி விட்டால் நீ என்னை விட்டு விட்டுப் போய் விடுவாய் அல்லவா? அதை எண்ணித்தான் கவலைப்படுகிறேன், பூங்குழலி!"

பூங்குழலியின் முகம் காலைப் பனித் துளிகளுடன் ஒளிர்ந்த மலர்ந்த செந்தாமரைபோல் விளங்கியது. அவள் இதழ்களில் புன்னகை விரிந்தது; கண்களில் கண்ணீர் துளித்தது.

"அமுதா! உன் அன்பை எண்ணி என் நெஞ்சு உருகுகிறது. உன்னைவிட்டு விட்டுப் போகவும் மனம் வரவில்லை; போகாதிருக்கவும் முடியவில்லை."

"ஆமாம்; அலைகடல் உன்னை அழைத்துக்கொண்டிருக்கிறது. அதனால் என்ன? நானும் உன்கூட வருகிறேன். அதற்கு உன் சம்மதத்தைத் தெரியப்படுத்து. என் உடம்பும் குணமாகி விடும்."

"அமுதா! நான் என் மனத்திற்குள் செய்து கொண்டிருக்கும் சபதம் அதற்குத் தடையாயிருக்கிறது."

"அது என்ன சபதம்?"

"புவி ஆளும் மன்னனை மணந்து அவனுடன் சிங்காதனத்தில் அமர வேண்டும் என்பது என் மனோரதம். இது முடியாவிட்டால் கன்னிப் பெண்ணாகவே காலங் கழிக்கச் சபதம் செய்திருக்கிறேன்."

"ஆமாம்; பொன்னியின் செல்வர் உன் மனதில் இடம் பெற்றிருக்கிறார். ஆனால், பூங்குழலி! அது நடக்கிற காரியமா?"

"நீ தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறாய். பொன்னியின் செல்வரிடம் இச் சோழநாட்டில் பிறந்தவர்கள் அனைவரும் அன்பு கொண்டிருக்கிறார்கள். ஆடவர்கள், மங்கையர்கள், வயோதிகர்கள், சின்னஞ் சிறு குழந்தைகள் எல்லாரும் அருள்மொழி வர்மரிடம் நேயம் கொண்டிருக்கிறார்கள். அதுபோலவே நானும் அவரிடம் அபிமானம் வைத்தேன். அவர் காய்ச்சலுடன் படகில் கிடந்தபோது நீயும் நானும் சேர்ந்துதான் அவருக்குப் பணிவிடை செய்து காப்பாற்றினோம்..."

"அப்படியானால், அவரிடம்......அவரிடம்......வேறு வித எண்ணம் உனக்கு நிச்சயமாக இல்லையா?"

"அமுதா! பொன்னியின் செல்வரை மணக்கப் பிறந்தவள் வேறொருத்தி இருக்கிறாள். அவள் கொடும்பாளூர் இளவரசி வானதி. நான் அவளிடம் ஏதோ விளையாட்டாகப் பேசப் போக அந்தப் பெண் 'நான் சிங்காதனம் ஏறுவதில்லை' என்று சபதம் செய்தாள்......"

"மன்னர் குலத்தில் பிறந்தவள் அவ்வாறு சொல்லிச் சபதம் செய்திருக்கிறாள். நீயோ 'சிங்காதனம் ஏறித்தான் தீருவேன்' என்கிறாய். இல்லாவிட்டால்

கன்னிப் பெண்ணாகவே காலங் கழிப்பேன் என்று சொல்லுகிறாய்."

"அமுதா! என் அத்தை. அரசர் குலத்தில் பிறந்தவரை நேசித்தான். அதனால் அவளுடைய வாழ்க்கை துன்பமயமாயிற்று. என் அத்தை அடையத் தவறிய பாக்கியத்தை நான் என் வாழ்நாளில் அடைவேன். ஏன் கூடாது?"

"உனக்கு அந்த ஆசை ஏற்பட்டது என்னுடைய பாக்கியக் குறைவினால் தான்!" என்றான் அமுதன்.

"அப்படி ஏன் நீ நிராசையடைய வேண்டும்? அரச குலத்தில் பிறந்தவர்கள்தான் அரசர்களாயிருக்கலாம் என்று விதி ஒன்றும் இல்லை. உன்னைப் போல் சாதாரண குடும்பத்தில் பிறந்தவர்கள் தங்கள் வீர பராக்கிரமச் செயல்களினால் இராஜ்யங்களை ஸ்தாபித்துச் சிங்காதனம் ஏறியிருக்கிறார்கள். நீயும் இன்றைக்கு அத்தகைய சபதம் எடுத்துக்கொள். இந்தப் பெரிய பாரத நாட்டிலோ, கடல் கடந்த அயல் நாடுகளிலோ உன் புஜ பல பராக்கிரமத்தினால் ஒரு இராஜ்யத்தை ஸ்தாபிக்கத் தீர்மானம் செய்து கொள். நான் உன்னை விட்டுப் பிரியாமல் உனக்குத் துணையாயிருக்கிறேன்" என்றாள் பூங்குழலி.

"பூங்குழலி! அத்தகைய காரியங்களுக்கு நான் பிறக்கவில்லை. என் மனம் கத்தி எடுத்துப் போர் செய்வதில் சடுபடவில்லை. ஒரு சிறு பிராணியை இம்சிக்கவும் நான் விரும்பவில்லை. மணிமகுடமும் சிங்காதனமும் என் உள்ளத்தைக் கவரவில்லை. சிவபெருமானையும் சிவனடியார்களையும் ஏத்திப் பரவிப் பாடிக் கொண்டு காலங் கழிக்க விரும்புகிறேன். ஆகையால் உனக்கும் எனக்கும் பொருத்தமில்லைதான்! உன்னை நான் மணக்க விரும்புவது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் படுவது போலத்தான். பூங்குழலி! உன்னை இங்கே தாமதிக்கச் சொல்வதில் பயனில்லை. நீ போய் விடு! என் உடம்பு குணமாவதற்காகக் காத்திராதே!" என்றான் சேந்தன் அமுதன்.

அச்சமயம் அக் குடிலின் வாசலில் காலடிச் சத்தம் கேட்கவே இருவரும் பேச்சை நிறுத்தினார்கள். (தொடரும்)

## அபய ஹஸ்தம்!




சென்னை இராஜ்யத்திலுள்ள கடன்பட்ட விவசாயிகளிடமிருந்து கடன் வசூலிக்கக் கோர்ட் நடவடிக்கை எடுப்பதை ஒரு வருஷத்துக்கு நிறுத்தி வைக்கும் அவசரச் சட்டம் இந்த இராஜ்யத்தில் அமுலுக்கு வந்திருக்கிறது.

# ஆராய்ந்தறிந்தோர் உபயோகிக்கும் சோப்

பொறுக்கி எடுக்கப்பட்ட புஷ்டியளிக்கும் தாவர எண்ணைகளையும் இதர மூலங்களையும் சேர்த்து புகழ்வாய்ந்த சிறந்த முறையில் பிரத்தியேகமாக திறம்பட தயாரிக்கப் பட்டது. இந்த **மிகப் பெரிய** டாய்லட் சோப்பின் அழகு தரும் நுரை அகலாத இனிய வாசனையை அளிக்கிறது.






## ஞாபகமிருக்கட்டும்

இவ்வழகு சோப், விஞ்ஞான விதிப்படி பரிசுத்த மூள்ளதென்றும், நற்பலனை அளிக்க வல்லதென்றும் ரூசுவாக்கப் பட்டது. பார்ப்பதற்கு பளிங்கைப்போல் தோன்றும் சில சோப்புகள் தவறுதலாக பரிசுத்த மூள்ளவை என்று கருதப் படுகின்றன. ஆனால் அத்தகைய தெளிவும் பளபளப்பும் பரிசுத்தம் அல்லது ரகத்தின் சின்னங்களல்ல.

**இதர கோத்ரெஜ்**
**உயர்ந்த ரக சரக்குகள்**

ஹேர் டானிக் — ஒ டகொலோன் — ஷேவிங் ஸ்டிக் — சலவை சோப் (தூள்கள்) — சோப்பெடல்ஸ் (ப்ளேக்குகள்).

**வேறு நீளுக வாசனையை விரும்புகிறவர்கட்கு**

**கோத்ரெஜ் நு. 2**

யு. எஸ். பீரோ ஆப் ஸ்டாண்டர்ட்ஸின் சுற்றறிக்கை: "சோப்பு விதிகளும் அவைகளின் பரிசோதனை முறைகளும்."

**கோத்ரெஜ் சோப்ஸ், லிட்.**

மெம்பர்: **இந்தியன் சோப் அண்டு டாய்லட்ரீஸ் மேகர்ஸ் அசோஸியேஷன்**



# இப்பொழுது உங்கள் நாட்டின்

## எதிர்கால வளர்ச்சிக்கு நீங்கள் உதவக்கூடிய சந்தர்ப்பத்திலேயே

10-வருட டிரெஷரி ஸேவிங்ஸ் டிபாசிட்டுகளில் முதலீடு செய்து உங்கள் எதிர்காலத்திற்கும் அதிக லாபம் ஏற்பட வழி தேடுங்கள். உங்கள் முதலீடு, இப்பெரும் நாட்டைச்சேர்ந்த ஒவ்வொரு தனி நபருக்கும் பயன் தரக்கூடிய திட்டங்களில்—அதாவது விவசாய திட்டங்கள், கைத்தொழிற் திட்டங்கள், அணைகட்டுகள், பாலங்கள் நிர்மாணம், குடிசைத்தொழில்கள், சமூக க்ஷேமாபிவிருத்தி சேவைகள் முதலியவைகளுக்கே—செலவழிக்கப்படுகின்றன.

## அதிக க்ஷேமகரமான காலத்திற்கு தயார் செய்து கொள்க

உங்கள் இன்றைய முதலீடு நாளைய ஒரு ஆதாரத்திற்கு வழி கோலும். இந்த டிரெஷரி ஸேவிங்ஸ் டிபாசிட்டுகளுக்கு வருமான வரிக்கு உட்படாத சிர வட்டியாக வருடம் 1 க்கு 3½ சதவிகிதம் கிடைக்கும். 10 வருட கெடு பூர்த்தியானவுடன் அசல் தொகை உத்தரவாதமாகத் திருப்பிக்கொடுக்கப்படும். இப்பொழுதே முதலீடு செய்து உங்கள் குடும்பத்திற்கும் உங்கள் நாட்டிற்கும் அதிக லாபம் ஏற்பட வழி தேடுங்கள்.

## முதலீடு செய்யுங்கள்

**பத்து வருட டிரெஷரி ஸேவிங்ஸ் டிபாசிட்டுகளில்**

## இந்தியாவின் சுபிட்சத் திட்டத்திற்கு 'உதவுங்கள்

இம்முதலீடு சம்பந்தமான இதர விவரங்கள், விதிகளை அறிய, தேசீயச் சேமிப்புக் கமிஷனர் [illegible] சிம்லா-3 அல்லது உங்கள் ராஜ்யத்திலிருக்கும் [illegible] தேசீயச் சேமிப்பு ஆபீஸருக்கு எழுதவும்.

AC-61 [illegible]

# கூந்தல் அழகி

எஸ்.வி.எஸ்.



அம்புஜத்தின் அழகிய நீண்ட கூந்தலைக் கண்டு ஆச்சரியப் படாதவர்களே கிடையாது. அம்புஜத்துக்கும் தன் கூந்தலின் மீது அளவு கடந்த ஆசை; அதைப் பற்றி மிதமிஞ்சிய பெருமை.

யாராகிலும் "அம்புஜம்! உன் தலை எவ்வளவு அழகாக இருக்குடி! உன் நீண்ட பின்னல் நல்ல பாம்பாட்டம் அழகாக..." என்று கூற வந்தால், "ஆமாம்! நீங்கள் சொல்லவில்லை என்று தான் ஏங்கிக் கொண்டிருந்தேன். சொல்லி விட்டீங்களோ இல்லையோ! இனி என் ஆத்மா சாந்தி அடைஞ்சு விட்டது!" என்று எரிச்சல் நிரம்பிய குரலில் கூறுவாள்.

அவள் தோழிகள் யாராகிலும் "ஏண்டி அம்புஜம்! இவ்வளவு நீளம் கூந்தல் வளருவதற்கு நீ என்னடி தந்திரம் செய்தாய்? எனக்கும் கொஞ்சம் அந்தத் தந்திரத்தைச் சொல்லித் தரக் கூடாதாடி!" என்றால் "என் தந்திரமும் மந்திரமும் உனக்குச் சொல்லித் தரணும் என்று எனக்கு ரொம்பக் கவலை பாரு!" என்று 'வெடுக்' கென்று விழுவாள்!

அம்புஜம் இப்படி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக, கட்டிப் பிடிக்க முடியாத கர்வக் காரியாகி வந்தாள். அவளுடைய பள்ளிக் கூடத் தோழிகளும் அவள் கூந்தல் அழகைக் கண்டு தூரத்திலிருந்தே ரஸித்து விட்டு, அவளுடன் பேச்சு வார்த்தை வைத்துக் கொள்வதில்லை. ஆக நாளடைவில் அவளுக்கு உற்ற நெருங்கிய தோழிகளே இல்லாமற் போய் விட்டார்கள். இதைப் பற்றி அவள் சற்றும் கவலைப் பட்டதாகத் தெரிய வில்லை. தன் நீண்ட கூந்தலின் பெருமையிலேயே மூழ்கித் தன்னை மறந்து இருந்து வந்தாள். அவள் வீட்டில் அவளுக்கு என்று ஒரு அறை யுண்டு. அந்த அறையில் தான் அவள் படிப்பது, படுத்துக் கொள்வது, அலங்காரம் செய்து கொள்வது எல்லாம். அந்த அறையில் தன் கூந்தல் அலங்காரத்துக்காக வேண்டிப் பெரிய நிலைக் கண்ணாடி வைத்திருந்தாள். பள்ளிக் கூடம் விட்டு வெளியிலிருக்கும் நேரங்களில் மற்றப் பெண்கள், 'ஸ்கிப்பிங்' ஆடுவதிலும் பல்லாங்குழி ஆடுவதிலும், கோலாட்டம் போடுவதிலும், 'பாட் மிண்டன்' ஆடுவதிலும் பொழுதைச் செலவழித்தனர். இவள் தன் அறையிலுள்ள நிலைக் கண்ணாடி முன் அமர்ந்து விதவிதமாகத் தன் தலையைப் பின்னி முடிப்பதில் நேரத்தைச் செலவழித்து வந்தாள்!

ஒரு நாள் அவள் பள்ளிக் கூடத்துக்கு 'ஸ்டை'லாக அன்ன நடை நடந்து வந்து கொண்டிருந்தாள். அந் நடையிலேயே அவள் எவ்வளவு பெரிய கர்வக் காரி என்பது நன்கு புலனாகியது. ஏன், அவளுடைய ஒவ்வொரு அங்கத்திலுமே புலப்பட்டது.

அவளுக்கு நேர் பின்னால் வந்து கொண்டிருந்த அம்புஜத்தின் வகுப்பு மாணவி ஒருத்தி "சச் சச்சோ!" என்று கூறினாள்.

அம்புஜம் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"என்னடி இது அம்புஜம்...?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"என்ன வந்து விட்டது?" என்றாள் கூந்தல் அழகி அம்புஜம்.

"நன்றாகக் கேட்டாய், போ! உன் பின்னல் பாரடி! உன் முழங்கால் வரைக்கும் வந்து இடிக்கும். அது இன்றைக்கு நாலு விரக்கடை குறைஞ்சு போய் விட்டதே! முழங்காலுக்கு மேலே போய் விட்டதே! என்ன அநியாயமாக இருக்கிறது!" என்றாள் அந்தப் பெண்.

இதற்குள் இன்னும் ஐந்தாறு பெண்கள் 'என்ன விஷயம்?' என்று பார்க்க அங்கே கூடி விட்டார்கள். அம்புஜத்துக்குத் தன் கூந்தலில் நான்கு விரல்கடை குறைந்து விட்டது என்னும் செய்தி அம்பு தைப்பது போல் அவள் உள்ளத்தைத் தைத்தது. நாலு பேர் எதிரில் தன் புண்ணுற்ற நெஞ்சத்தைக் காட்டிக் கொள்ள முடியாதவளாய், "உங்களுக்கு வேறே வேலை என்னடி! எப்பப் பார்த்தாலும் என் கூந்தலைப் பற்றி வினைத்துக் கதை கட்டி விடறதே வேலையாகப் போச்சு! அவர் அவர்கள், அவரவர்கள் காரியத்தைப் பார்த்துக் கொண்டு போங்களேண்டி!" என்று எரிந்து விழுந்து விட்டு அவள் வகுப்புக்குப் போய் விட்டாள்.

வகுப்புக்குச் சென்ற அம்புஜத்தின் மனம் ஒரு நிலையில் நிற்கவில்லை. ஆசிரியை பாடம் நடத்திக் கொண்டிருந்தாள். அம்புஜம் ஒரு வரிகூடக் காதில் வாங்கிக் கொள்ள வில்லை. 'என் கூந்தல் நாலு விரல்கடை நிஜமாகவே குறைந்து விட்டதா? இப்படியே குறைந்து வந்தால்.......இன்னும் கொஞ்ச நாளில்...... ஐயோ, நினைக்கவே பயமாக இருக்கிறதே!... என் கூந்தல் இல்லாமல் நான் வாழ்ந்து என்ன பிரயோஜனம்....ராமா!...' இப்படியெல்லாம் அவளுடைய மனத்தில் வேதனை அளிக்கும் எண்ணங்கள் அலைமோதிக் கொண்டிருந்தன. அதனால் அவளுக்கு வகுப்பில் உட்காரப் பிடிக்கவில்லை. "டீச்சர், எனக்குத் தலைவலிக்கிறது; நான் வீட்டுக்குப் போகிறேன். அனுமதி கொடுங்கள்" என்றாள்.

அவள் வகுப்பு வாத்தியாரம்மாளும் அம்புஜத்தின் மனம் உண்மையிலேயே சொல்லி முடியாத உளைச்சலை அனுபவித்து வருவதை அவள் முகக் குறிப்பிலே உணர்ந்திருந்தாள். அதனால் அம்புஜம் வீட்டுக்குப் போவதற்கு அனுமதி கேட்டதும் உடனே அவளுக்கு அனுமதி கொடுத்து அனுப்பி விட்டாள்.

• • •

அம்புஜம் பள்ளிக் கூடத்துக்குப் புறப்பட்டுச் சென்ற சற்று நாழிகைக் கெல்லாம், அவள் தகப்பனாரும் ஆபீஸுக்குப் புறப்பட்டுச் சென்றார். அம்புஜத்தின் தாயார் வாசற் கதவைத் தாளிட்டு விட்டு, சமையலறையில் ஏதோ காரியமாக இருந்தாள்.

சற்று நேரத்துக் கெல்லாம் யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

"யாரது?" என்று கேட்டுக் கொண்டே வாசற்புறம் வந்தாள்.

"நான்தாண்டி, அகிலாண்டம்" என்றது கதவுக்கு வெளிப்புறம் இருந்த குரல்.

அகிலாண்டம் என்றது அம்புஜத்தின் தாயாரை. 'நான்தாண்டி' என்ற குரலிலிருந்து வந்திருப்பவள் ரங்கநாயகி என்று தெரிந்து கொண்டாள் அகிலாண்டம். இதற்குள் கதவைத் திறந்தாயிற்று. உள்ளே வந்த ரங்கநாயகி அம்மாளைப் பார்த்து, "ஏது, இவ்வளவு தூரம் வந்து விட்டீர்கள் இந்த வேளையில்? புருஷாள் ஆபீஸ் போயாச்சா?" என்று கேட்டாள்.

"அவா ஆபீஸ் போனாத்தானே நமக்கு மூச்சுவிட ஒழியறது! இல்லேன்னா நச்சு நச்சுன்னு ஏதாகிலும் கேட்டுக் கொண்டிருக்கா. பள்ளிக்கூடம் போகிற குழந்தைகளின் அவசரம் வேறு - கை கால் ஓடமாட்டேன்கிறது...அது சரி, ஒரு கரண்டி கடுகு இருந்தால் கொடேன். பதினொரு மணி ஆயிடுத்தோன்னோ. கடையெல்லாம் சாத்தியிருப்பா. மத்தியானத்துக்கு மேலே வாங்கியனுப்புகிறேன்" என்றாள் ரங்கநாயகி.

"இதற்கென்ன அவசரம்? மத்தியானமே அனுப்ப வேண்டும் என்பதில்லை! சாவகாசமாக அனுப்புங்கோ!" என்றாள் அகிலாண்டம்.

அந்த வேளை ஒரு கையில் புஸ்தகக் கட்டுடனும் மற்றொரு கையில் 'டிபன் பாக்ஸு'டனும் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள் அம்புஜம்.



# வீட்டுச் சலவை வேலையை

## சுலபமாக்குகிறது



501 ஸோப்புகளின் செழுமையான நுரை துணி மணிகளுக்குள் ஊடுருவிச் சென்று, அழுக்கை யெல்லாம் மாயமாய் வெளியேற்றுகிறது. இந்த ஸோப்புகள் வீட்டுச் சலவை வேலையை உங்களுக்கு அதிக சுலபமும் சிக்கனமுமாக்குகின்றன.




# 501

## சலவை ஸோப்புகள்

எல்லாம் டாடா தயாரிப்புகளே — A TATA PRODUCT — டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

"என்னடி அம்புஜம்! ஏன் வந்து விட்டாய்?" என்று பரபரப்புடன் கேட்டாள் அகிலாண்டம்.

"தலையை வலிக்கிறது! உடம்புக்கும் ஜுரம் வரும் போலிருந்தது! டீச்சரண்டை சொல்லிவிட்டு வந்து விட்டேன்" என்று கூறினாள் அம்புஜம்.

இதைக் கேட்ட ரங்கநாயகி அம்மாள், "இப்படித்தாண்டி அம்மா எங்கள் மாலதியும் வந்தாள். தலைவலி, ஜுரம்னு ஸ்கூலிலிருந்து வந்தாள்; படுத்தாள்; அப்படியே படுத்து விட்டாள்! ஒரு வாரமாக ஜுரம் விடவில்லை. டாக்டர் வந்து பார்த்து டைபாய்டு ஜுரம் என்று சொல்லிவிட்டார்! படுத்து மாசம் ஒன்றாகிறது; இன்னும் எழுந்து நடமாடும் வழியைக் காணோம். அதனால் ஜாக்கிரதையாக உடம்பைப் பார்த்துக்கொள், அம்மா!" என்றாள் ரங்கநாயகி.

"ஆமாம், மாமி! கேட்க மறந்தே போய் விட்டேனே! இப்போ எப்படியிருக்கு மாலதிக்கு?" என்றாள் அகிலாண்டம் அப்பொழுதுதான் மாலதியைப் பற்றி நினைவு வந்தவளாய்.

"என்னத்தைச் சொல்வேன்! இப்போ ஜுரமில்லை; பிழைத்தது புனர்ஜன்மம்தான். அவள் உடம்பு மட்டும் ஒன்றுக்கும் உதவாமல் போச்சு! உடம்பிலே எலும்புந் தோலுந்தான் இருக்கு! இனிமேல் மாலதிக்குப் பழைய உடம்பு எங்கே வரப் போகிறது!" என்று ஆற்ற முடியாத துயரத்தை அவ் வார்த்தைகளில் வெளி யிட்டாள் மாலதியின் தாயார் ரங்கநாயகி அம்மாள்.

'பழைய உடம்பு' என்று கூறிய ரங்கநாயகி அம்மாளின் வார்த்தைகளில் எவ்வளவோ பொருள் பொதிந்திருந்தது. ஆம், மாலதி தங்கச் சிலையோ, தந்தப் பதுமையோ என்று வியக்கும்படியான அழகு பெற்றிருந்தாள். அந்த அழகு எல்லாம் டைபாய்டு ஜுரம் குறையாடி விட்டிருக்குமல்லவா? அப்படிப்பட்ட அழகியைப் பெற்ற தாயின் உள்ளம் எவ்வளவு நொந்துபோயிருக்கவேண்டும்!

இவ் வார்த்தைகள் அம்புஜத்தின் காதுகளில் தெளிவாக விழுந்தன!



தியாகராய நகர் வாஞ்சி-சிதம்பரம் இளைஞர் மன்றத்தார் நவம்பர் 29உ சனிக்கிழமை அச்சங்கத்தின் ஆண்டு விழாவை நல்ல முறையில் கொண்டாடினார்கள். சென்னை நகரில் உள்ள தொழில் இழந்த கைத்தறி நெசவாளிகளுக்கு அன்று உணவளிக்கும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக் கொண்டு, சென்னை நகரசபையாரின் உதவியுடன் நடத்தி வைத்தார்கள். மாலையில் ஸ்ரீ ராமகிருஷ்ண உயர்தரப் பள்ளி மண்டபத்தில் பொதுக் கூட்டமும் உற்சாகமாக நடைபெற்றது. ஸ்ரீ பக்தவத்ஸலம், ஸ்ரீமதி ஜோதி வெங்கடாசலம், ஸ்ரீ சின்ன அண்ணாமலை முதலியவர்கள் சொற்பொழிவு ஆற்றினார்கள். ★ ★ ★

இப்படிக் கொஞ்ச நேரம் வரை, ரங்கநாயகி அம்மாள் அகிலாண்டம்மாளுடன் பேசிக் கொண்டிருந்து விட்டு, ஒரு கரண்டியில் கடுகு வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பிப் போய்ச் சேர்ந்தாள்!

மாலதி, அம்புஜத்துக்குச் சம வயதுள்ள பெண். அவளும் மாலதி, படித்து வந்த பள்ளிக்கூடத்திலேயே படித்து வந்தாள், ஒரே வகுப்பில். ஆனால் வெவ்வேறு செக்ஷனில் இருவரும் படித்ததால், மாலதியைத் தெரியுமே தவிர அதிகமாகப் பழக்கமில்லை. மேலும் அம்புஜம்தான், தன் கூந்தலின் பெரு

மையிலேயே மூழ்கி, பிறருடன் பேசவில்லை, பழகுவதில்லை என்ற கொள்கை வேறு வைத்துக் கொண்டிருந்தானே!

ஆயினும் மாலதியைப் பற்றித் தெரியாமல் இருக்க முடியாது. ஏனெனில் அவள் அவ்வளவு அழகாக இருந்தாள். அவள் அழகு அவ்வளவு பிரசித்தமானது. அவளுடைய மேனியழகும், அகன்ற நெற்றியும், அந்த நெற்றியின் இரு ஓரங்களில் சுருண்டு விழுந்த கூந்தலின் அழகும், எடுப்பான மூக்கும், கிஞ்சுக வாயின் அழகும் — இன்றெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தால் கூட அலுக்காது போலிருந்தது. பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கே, அவளைப் பார்க்கும்போது ஆணாகப் பிறந்தோமில்லையே என்ற ஏக்கம் ஏற்படுவதுண்டு. அப்படிப்பட்ட அழகு இன்று சின்னாபின்னப் படுத்தப்பட்டிருந்தது.

அம்புஜத்துக்கு மாலதியின் நினைவு அவ்வளவாகப் பாதிக்கவில்லை. அவளுடைய அற்புத அழகு கலைந்திருப்பதைப் பற்றி ஒரு கணம் எண்ணி வருத்தப்பட்டானே தவிர அதற்கு மேல் இல்லை. அன்றெல்லாம் தன் கூந்தலைப் பற்றிய கவலைதான். இப்படி உதிர ஆரம்பித்தால் கடைசியில் என்னவாகும்...? ஐயோ! நினைக்கவே முடியவில்லையே! அதனால் இதற்கு ஏதாகிலும் பரிகாரம் உடனே தேடியாக வேண்டும்...

இந்த யோசனையில் அவனுக்கு ஒன்றுமே வேண்டியிருக்கவில்லை. அவன் தாயார் மத்தியானம், "ஏதாவது சாப்பிடுகிறாயா?" என்று கேட்டாள்.

"வேண்டாம்" என்று விட்டான்.

ராத்திரி மறுபடியும் "சாப்பிடுகிறாயா?" என்று கேட்டாள்.

"வேண்டாம்" என்று மறுத்து விட்டான்.

"ஜவ்வரிசி கஞ்சியாகிலும் வைத்துத் தருகிறேன்—சாப்பிடு. வயிற்றில் ஆகாரமில்லாமல் இருக்கக் கூடாது" என்றாள்.

தாயாரின் வற்புறுத்தலின்பேரில் ஜவ்வரிசிக் கஞ்சியை மட்டும் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொண்டான்.

ஆனால் அவனுடைய மனக் கவலை அவனை விட்டுப் போகவில்லை.

ஒருநாள் பத்திரிகையில் "கூந்தல் வளரும் தைலம்-பிரபல டாக்டர்கள் பரிசோதித்தது" என்று விளம்பரம் வந்திருந்தது.

உடனே அந்தத் தைலத்தை வரவழைத்து அம்புஜம் தடவிக் கொண்டு பார்த்தான். கூந்தல் வளருவதற்குப் பதில், இன்னும் வேகமாக உதிர ஆரம்பித்தது.

பெரிய டாக்டரிடம் போய் விசாரித்தான். அவர் ஏதோ லோஷன் எழுதித் தந்தார். அதைத் தடவிக் கொண்டான். அதனால் இன்னும் அதிகமாக உதிரத்தான் செய்தது.

சிலநாள் கழித்து ஒரு நாட்டு வைத்தியரை இது சம்பந்தமாகக் கேட்டான். அவர் தலைக்கு ஒரு தைலமும் உள்ளுக்கு ஒரு லேகியமும் கொடுத்தார்.

அதன் பலனாகத் தலை முழுதுமே உதிர்ந்து சொட்டையாகி விட்டது! பின்னுவதற்கு நாலு கூந்தல் கூட இல்லை.

இவ்வளவு படுமோசமான நிலைக்கு வந்தவுடன் அம்புஜத்தின் உள்ளத்தில் புதுமாதிரியானதொரு உறுதி ஏற்பட்டது. 'மாலதி எவ்வளவு அழகாக இருந்தாள். அவள் டைபாய்டு ஜுரத்தில் கிடந்து தன் அழகு முழுதும் இழந்து விடவில்லையா, பாவம்! அவள் மனத்துயரம் எவ்வளவு இருக்க வேண்டும்! அவளுக்கு என்னுடைய அவல நிலையைக் கூறினால், சற்று மன நிம்மதி ஏற்படும் அல்லவா? கஷ்டத்திலிருப்பவர்களுக்குக் கஷ்டத்திலிருக்கும் மற்றவர்களைப் பார்த்தால்தான் நிம்மதி ஏற்படும். இந்த உதவியை நான், மாலதிக்குச் செய்துவிட்டு வருகிறேன்!' என்று எழுந்தான். கண் விழித்தான். எதிரில்தான் தினமும் அழகு பார்க்கும் கண்ணாடியில் தன் கூந்தல் எப்பொழுதும் போல் அழகாக நீண்டிருப்பதைக் கண்டான். அவன் உள்ளத்தில் உண்டான ஆனந்தத்துக்கு அளவில்லை. தலையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். தன் நீளப் பின்னலை ஒரு முறை உருவி விட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான். படுக்கையை விட்டுத் துள்ளிக் குதித்து எழுந்து நடனமாடினான். தான் கூந்தலை இழந்து விட்டதாகக் கண்டதெல்லாம் வெறும் கனவு, ஒரு இரவில் கண்ட கனவு

# 18-12-53 முதல்

## தென்னிந்தியா முழுவதும்
## வெளியாகிறது






நடிகர்கள்:
**நர்கீஸ், ராஜ்கபூர்**
**விஜயலக்ஷ்மி, பிரான்**
டைரக்ஷன்: ராஜா நவாதே
சங்கீதம்: ஷங்கர், ஜெயகிஷன்
கதை: இந்தர் ராஜ் ஆனந்த்
பாட்டுகள்: கம்பதாசன்
வசனம்: எஸ்.டி. சுந்தரம்

ஆர்.கே. பிலிம்ஸ்

# அவன்?
(தமிழ்)

சென்னை:

## பிரபாத், சித்ரா & சயானி

**ஆல் இந்தியா பிலிம் கார்ப்பரேஷன் வெளியீடு**

# "SHANKAR'S WEEKLY"

## CHILDREN'S NUMBER 1953

# பாலர் மலர்

43 வெளிநாடுகளிலிருந்து சிறுவர்களால் வரைந்து அனுப்பப்பட்ட 17,000 சித்திரங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட அதி உன்னதமான படங்களும், ஆங்கிலக் கட்டுரைகளும் கொண்டது. ஜனவரி 1954-ல் இருநூறு பக்கங்களுடன் வெளியாகின்றது.

**விலை ரூ. 5 தான்**

உங்கள் இதழைக் கீழ்க்கண்ட விலாசத்திற்கெழுதி இப்பொழுதே பதிவு செய்து கொள்ளுங்கள்.

SHANKAR'S WEEKLY
ODEON BUILDING : NEW DELHI-1




# மில்க் ஆப் மக்னீஷியா

மற்றுமொரு
ஐ. டி. எல். தயாரிப்பு.

வயிற்றிலுள்ள புளிப்பைப் போக்கி மலக்கட்டினை அவிழ்க்கும்.

தயாரிப்பவர்கள்:
தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லேபரேட்டரி லிட்., மல்லேஸ்வரம், பெங்களூர்.




விற்பனை ஏஜண்டுகள்:

**பெஸ்ட் & கோ. லிமிடெட்.,**
தபால் பெட்டி நெ. 63
சென்னை

தான் என்று அறிந்து கொண்டதில் அம்புஜத்துக்கு அவ்வளவு சந்தோஷம் ஏற்பட்டது.

இந்தப் பயங்கரக் கனவு உண்மையிலே, அம்புஜத்தின் மனப் போக்கில் ஒரு மாறுதலை ஏற்படுத்தி யிருந்தது. இல்லையென்றால், கூந்தலுக்குப் பழுது நேரவில்லை என்று தெரிந்த பிறகும் கர்வக்காரியான அவள், மாலதியைப் பார்க்க வேண்டும் என்று நினைப்பாளா? மாலதியைப் பார்த்துத் தேறுதலான நாலு வார்த்தையைச் சொல்ல வேண்டும் என்றுதான் நினைப்பாளா?

இதோ பாருங்கள், தலையை மேலாக வாரிக் கொண்டு, காலில் செருப்பை மாட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டாள்! பழைய மிடுக்கு நடை, கர்வ நடை போய், உல்லாசமாக யாருடனும் சர்வ சகஜமாகப் பழகும் நடையே வந்து விட்டதே!

"அம்புஜம்! நேற்று வரைக்கும் ஜுரம் என்று சொல்லிக் கூத்து அடித்து விட்டு, இன்றைக்குக் காலங் கார்த்தாலே காப்பி கூடச் சாப்பிடாமே எங்கேடி போறே?" என்றாள் அம்புஜத்தின் தாயார்.

"ஜுரம், கிரம் ஒன்றுமில்லை அம்மா! எல்லாம் சரியாய்ப் போய்விட்டது! மாலதி வீட்டு வரைக்கும் போய் அவளை ஒரு தரம் பார்த்து விட்டு இதோ வந்துவிடுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே ஓடினாள்.

அம்புஜம் மாலதியின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள். மாலதி படுத்திருந்த அறையின் வாசற்படியில் நின்றாள். மாலதி படுக்கையில், வாசற்படிக்கு எதிர்ப்புறம் முகத்தைத் திருப்பி வைத்துக் கொண்டு படுத்திருந்தாள்.

அம்புஜம் மெல்லிய குரலில் "மாலதி!" என்று கூப்பிட்டாள்.

மாலதி மெள்ளத் திரும்பிப் படுத்து "யாரு, அம்புஜமா!" என்று கூறினாள். அவள் குரலில் மகிழ்ச்சியும் ஆவலும் நிரம்பி யிருந்தன.

"ஆமாம்!" என்று கூறிக் கொண்டே, வாசற்படியிலிருந்த அடியை உள்ளே எடுத்து வைத்தாள் அம்புஜம்.

"இப்படி உட்கார், அம்புஜம்! உன்னைப் பற்றியே எனக்கு நேற்றெல்லாம் கவலையாக இருந்தது!" என்றாள் மாலதி.

அம்புஜத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. "என்னைப் பற்றியே கவலையாக இருந்ததா? ஏன்?" என்றாள் அம்புஜம்.

"நேற்றைக்கு என் அம்மா உங்கள் வீட்டுக்கு வந்திருந்தாள் அல்லவா? அப்போது நீ பள்ளிக்கூடத்திலிருந்து தலைவலி, ஜுரம் என்று சொல்லிக் கொண்டு வந்தாயாம். நானும் இப்படித்தான் ஒன்றரை மாசத்துக்கு முந்தி 'தலைவலி, ஜுரம்' என்று வந்து படுத்தேன்.. இன்னும் சரியாக எழுந்து நடமாட முடியவில்லை. அந்தமாதிரி உனக்கும் எங்கே டைபாய்டு ஜுரம் வந்து விடுமோ என்று கவலைப்பட்டேன். இந்த டைபாய்டு ஜுரம் வந்தால் முதலிலே தலை மயிர்தான் கொட்டிப் போகும். உன் அழகிய கூந்தல் போய் விட்டால் என்ன பண்றது என்று எனக்கு நேற்றெல்லாம் உன்னைப் பற்றியே கவலை. இப்போ உனக்கு ஜுரம் ஒன்றுமில்லையே!" என்றாள் மாலதி ஆவலுடன்.

அம்புஜத்துக்கு, மாலதியின் உயர்ந்த உள்ளப் பண்புக்கு ஏற்றபடி பதில் சொல்லத் தெரியவில்லை. "எனக்கு இப்போ ஜுரம் ஒன்றுமில்லை மாலதி! நீ உன் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்! நான் போய் வரட்டுமா?" என்று அவளிடம் விடை பெற்றுக் கொண்டாள்.

வழியெல்லாம், 'மாலதி, உன் உடலழகை இழந்தால் என்ன? உன் உள்ளத்தின் அழகு அப்பப்பா! சொல்லி முடியாது போலிருக்கிறதே!' என்று எண்ணி வியந்து கொண்டே தன் வீட்டை நோக்கி நடந்தாள் அம்புஜம்.

★ கூத்தா நல்லூருக்கு நியமனமாகி யிருக்கும் பஞ்சாயத்து போர்டு நிர்வாக அதிகாரி திரு. இரா. கோவிந்த் அவர்கள், பண்டுதகுடி ஹரிஜனத் தெருவில் சுமார் 100 பேர்கள் கொண்ட தொண்டர் படையுடன் 150 கெஜம் கொண்ட சாலை ஒன்றை அமைத்துள்ளார். அவருக்குப் பாராட்டுதல் தெரிவிக்கும் பொருட்டுக் கூத்தா நல்லூர் பஞ்சாயத்து போர்டு தலைவர் ஜனாப் மொய்தீன் தலைமையின் கீழ் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ஜனாப் எஸ். இ. ஏ. அப்துர் ரஹ்மான் ஹரிஜனங்களுக்குச் சுகாதாரத்தின் அவசியம் பற்றிக் கூறினார். தொண்டர்கள் ஹரிஜனத் தெருவைச் சுத்தம் செய்யும் காட்சியைப் படத்தில் காணலாம்.



# சேலம் மகாநாடு

எஸ். விஜயலக்ஷ்மி எம். ஏ., எம். லிட்.

இரண்டு நதிகள் சேருமிடத்தை நம் நாட்டில் புனித க்ஷேத்திரமாகக் கருதுவது வழக்கம். காந்திஜி வழி வந்த ஆச்சாரிய கிருபளானியின் கட்சியான பிரஜா கட்சியும், தீவிர தேச பக்தர்களைக் கொண்ட சோஷலிஸ்டு கட்சியும், நடந்த பொதுத் தேர்தலுக்குப் பிறகு ஒன்றாக இணைந்தன. தேர்தலுக்கு முன்பே இரண்டு கட்சிகளைச் சேர்ந்தவர்களும் ஒன்றாகச் சேர்ந்து இயங்கி இருந்தால், நாட்டிலே புதியதொரு நிலைமை ஏற்பட்டிருக்கும். ஆனால் காங்கிரஸிலிருந்து வெளியேறிய ஸ்ரீ கிருபளானியும் அவரைச் சேர்ந்தவர்களும் தனியாக இயங்கினால் நல்லது என்று நினைத்தார்கள். அவர்களின் கட்சித் துவக்க மகாநாட்டுக்குச் சென்று ஜெயப்பிரகாஷ் நாராயண் "சேர்ந்து உழைப்போம்; வாருங்கள்" என்று அழைத்தார். ஆனால் ஆச்சாரியாஜி சேரவில்லை. அன்று நடக்கத் தவறியது பிறகு நடந்து விட்டது. பிறகு உருவானதுதான் பிரஜா—சோஷலிஸ்டு கட்சி.

இப் புதிய கட்சியின் தமிழ்நாடு முதல் மகாநாடு சென்ற வாரம் சேலத்தில் நடந்தது. சேலம் டவுன் ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் உள்ள மைதானத்தில் சுமார் இருபதினாயிரம் பேர்கள் உட்காரக்கூடிய அளவுக்குப் பெரிய பந்தல் போட்டிருந்தார்கள். அப்பந்தலில் தலைவர்கள் பேசும் மேடையின் பின்னால், மகாத்மா காந்தி, ஆச்சாரிய கிருபளானியின் படங்களும், முன்னால் ஜெயப்பிரகாஷ் நாராயண், அசோக் மேத்தாவின் உருவப் படங்களையும் வைத்து அலங்கரித்திருந்தனர்.

தமிழ் நாட்டின் எல்லா ஜில்லாக்களிலிருந்தும் 2000-க்கு அதிகமான கட்சிப் பிரதிநிதிகளும், அங்கத்தினர்களும் நவம்பர் 28-ம் தேதி காலைக்குள் வந்து சேர்ந்தனர். அவர்கள் தங்குவதற்கும் சாப்பாட்டுக்கும் வரவேற்பு கமிட்டியினர் பிரமாதமான ஏற்பாடுகள் செய்திருந்தனர்.

சென்னையிலிருந்து நீலகிரி எக்ஸ்பிரஸ் வண்டியில் மகாநாட்டின் தலைவரான ஆச்சாரிய கிருபளானி, டாக்டர் கே. பி. மேனன், மற்றும் கவியரங்கில் கலந்து கொள்ள அழைக்கப்பட்டிருந்த கொத்தமங்கலம் சுப்பு, என். டி. சுந்தரம், கவிஞர் கம்பதாஸன் முதலியோரும் இத்துடன் சென்னை, செங்கற்பட்டு வடாற்காடு ஜில்லாக்களிலிருந்து நூற்றுக் கணக்கான ஊழியர்களும் சேலம் ஜங்ஷனில் வந்து இறங்கியபோது, சேலம் நகரே அதிரும்படி ஜே கோஷம் செய்து சேலம் பிரஜா-சோஷலிஸ்டு கட்சியினரும் பொதுமக்களும் வரவேற்றனர்.

இருபத்தெட்டாம் தேதி காலை ஒன்பது மணிக்கு மகாநாட்டுப் பந்தலிலிருந்து 3000 பேர் கொண்ட ஊர்வலம் புறப்பட்டுச் சேலம் நகரத்தின் முக்கிய வீதிகளின் வழியே 10-30 மணிக்கு மகாநாட்டுப் பந்தலை வந்தடைந்தது. சேலம் நகரத்திலேயே சமீபத்தில் இவ்வளவு பிரம்மாண்டமான ஊர்வலம் சென்றதில்லை யென்று சேலம்வாசிகள் பேசிக் கொண்டனர்.

கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் பொதுக் காரியதரிசி ஸ்ரீ பி. எஸ். சின்னதுரை பிரஜா—சோஷலிஸ்டு கட்சியின் ஏர் சக்கரக் கொடியை ஏற்றி வைத்தார். தமிழ் நாட்டிலே, சோஷலிஸ்டு ஊழியர்களால் வளர்க்கப்பட்டு வரும் 30,000 தொழிலாளர்களைக் கொண்ட மாபெரும் தொழிற் சங்கம் கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கமாகும். இச்சங்கத்தை நிறுவி வளர்த்தவர் காலஞ்சென்ற தியாகி என். ஜி. ராமஸ்வாமி. தமிழ் நாடு அவரை நன்கு அறியும். அவரோடு துணையாக நின்று தொண்டு செய்த ஸ்ரீ சின்னதுரை இச்சங்கத்தின் காரியதரிசியாகச் சேவை செய்து வருகிறார். 1942-ம் ஆண்டு ஆகஸ்டுப் புரட்சியிலே, இருபது ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டு அப்புறம் சிறையில் ஐந்து ஆண்டுகள் தண்டனையை அனுபவித்த இளைஞர் ஸ்ரீ சின்னதுரை. இந்த ஆண்டில் தமிழ் நாட்டு பிரஜா - சோஷலிஸ்டு கட்சிக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார்.

மகாநாட்டைச் சென்னை சட்டசபை பிரஜா சோஷலிஸ்டு கட்சியின் தலைவர் டாக்டர் கே. பி. மேனன் ஆரம்பித்து வைத்தார். டாக்டர் மேனன் வைத்தியரல்ல. சமூகப் பொருளாதார சாஸ்திரங்களை அமெரிக்காவிலுள்ள காலிபோர்னியா சர்வகலாசாலையில் நன்கு கற்றுணர்ந்து டாக்டர் பட்டம் பெற்றவர். ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயணனுடன் அங்கே ஒன்றாகப் படித்தவர். அவரும் ஜெயப்பிரகாஷும் நெருங்கிய நண்பர்கள். அமெரிக்காவில் பதினேழு ஆண்டுகள் தங்கி இருந்து, ஆசிரியராகவும் வேலை செய்தவர். இந்தியாவுக்கு வந்த பிறகு மகாத்மாவின் ஆச்ரமத்திலேயே பணியாற்றி வந்தார். இந்திய சமஸ்தான மக்களின் காங்கிரஸிற்கு நேருஜி தலைவராக இருந்தபொழுது, காரியதரிசியாக இருந்து வேலை செய்திருக்கிறார். பிரஜா உரிமை சங்கத்தில் நேருஜி தலைவராக இருந்தபொழுதும் காரியதரிசியாக இருந்திருக்கிறார். 1942 ஆகஸ்டு புரட்சியில் மொரப்பூர் வெடிகுண்டு வழக்கில் சென்னை ஹைகோர்ட்டால் பத்து ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார். ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயணனுடன் சேர்ந்து ஜனநாயக சோஷலிச இயக்கத்தை உருவாக்க உழைத்து வருகிறார். மகாநாட்டைத் திறந்து வைத்து நிகழ்த்திய பிரசங்கத்தில் "பிரஜா சோஷலிஸ்டு கட்சியின் எதிர்காலம் சிறப்பாக இருக்க வேண்டுமானால், கட்சி ஊழியர்கள் கட்சியைப் பற்றி கொண்டு, சுயநலமற்று, பணியாற்ற வேண்டும். ஒரு கட்சியுடன் கூட்டு சேர்ந்தோ, ஒத்துழைத்தோ, ஜனநாயக சோஷலிச ஆட்சியைப் பெற்றுவிட முடியுமென்று நினைப்பது தவறு" என்று அவர் எச்சரித்தார்.

ஆச்சாரிய கிருபளானியின் தலைமையுரை இந்திய சோஷலிச தத்துவத்துக்கு விளக்கம் தருவதாக விளங்கியது. சாதாரணமாக ஆச்சாரியஜியிடம் காணப்படும் முன்கோபம் சேலத்தில் இல்லவே இல்லை. அவருடைய பேச்சில் வழக்கமான கையாண்டியும் இல்லை.

கலாசாலை ஆசிரியரைப் போன்று, முற்போக்குப் பொருளாதாரத்தைக் கொண்ட ஐரோப்பிய நாடுகளின் சோஷலிஸத்துக்கும், இந்திய சோஷலிஸத்துக்கும், இடையே இருக்கும் வித்தியாசங்களை அலசித் தெளிவாக்கினார். அவர் ஆங்கிலத்தில் வறட்டுப் பொருளாதார விஷயங்களைச் சொன்ன போதும் கூடக் கொஞ்சமும் சுவை குன்றாது, அப்படியே தமிழில் சென்னை ஸ்ரீ வி. ஆர். ராதாகிருஷ்ணன் மொழிபெயர்த்தார். ஸ்ரீ ராதாகிருஷ்ணனின் மொழிபெயர்ப்பைக் கேட்ட சேலம்



சேலத்தில் நவம்பர் 28, 29 தேதிகளில் நடந்தேறிய தமிழ்நாடு பிரஜா-சோஷலிஸ்டுக் கட்சியின் முதல் மகாநாட்டுக்கு விசாலமான பந்தல் அமைத்துச் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தார்கள். 1. அக்கிராசனர் ஆச்சாரிய கிருபளானி, டாக்டர் கே. பி. மேனன், ஸ்ரீ கே. ஆர். நல்லசிவம். 2. பந்தலின் வெளித்தோற்றம். 3. மகாநாட்டுக்கு வந்த பிரதிநிதிகள்.

கல்லூரி ஆசிரியர் ஒருவர், "ஆச்சாரிய கிருபளானிக்குத் தமிழ் தெரிந்திருந்து, அவர் தமிழில் பேசி யிருந்தாலுங்கூட இவ்வளவு தெளிவாக விளக்கி யிருப்பாரா என்பது சந்தேகம்தான்" என்று சொன்னார்.

மகாநாட்டில் வீரர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் படத்தைத் திறந்து வைக்கும்படி எனக்குக் கட்டளை யிட்டார்கள். இந்நாட்டில் பொதுவாழ்வில் ஈடுபட முன்வரும் பெண்கள் குறைவு. அப்படி முன் வருகிறவர்களுக்கு ஏற்படும் இன்னல்களும் சங்கடங்களும் அதிகம். இந்தச் சூழ்நிலையில் என்னைப் போன்ற ஒரு பெண் சோஷலிஸ்டு கட்சியில் சேர்ந்து பணி செய்ய முன் வந்தது எப்படி என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

"அரசியல் அயோக்கியர்களுக்குப் புகலிடம்" என்று ஆங்கிலேய அறிஞர் ஒருவர் கூறியுள்ளார். ஆனால் காந்திஜி அதைப் பொய்யாக்கினார். காந்திஜி "அரசியல் என்றால் அதில் சத்திய சீலர்கள் தான் இருக்க முடியும்" என்ற எண்ணத்தை உண்டாக்கினார். கதருடை யணிந்து, கிராமங்களில் சென்றால், சுதந்திரப் போராட்ட காலத்தில் அவர்களுக்குத் தனி மதிப்பும், விசேஷ கௌரவமும் அளித்தார்கள் அல்லவா! துரதிருஷ்டவசமாக நம் நாட்டில் அந்த நிலைமை மாறி வருகிறது. சேவை செய்வதுதான் அரசியல் என்று காந்திஜி போதித்ததை அடியோடு மறந்து, அதிகாரத்தை அடைய நேர்மையற்ற முறையையும் கையாளலாமென்ற எண்ணம் பரவி வருகிறது. இந்தச் சூழ்நிலையில்கூட காந்திஜி போதித்த அறநெறி வாழ்க்கையை அரசியலில் கடைப்பிடிக்கும் அற்புதத் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயண். அவருடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் எனக்கு ஒரு முறை கிடைத்தது. சென்னையில் ஜெயப்பிரகாஷ் அவர்கள் உடல் நலம் குன்றி வைத்திய சிகிச்சைக்காக ஒரு மாத காலம் 1960-ம் ஆண்டு ஜனவரியில் தங்கி யிருந்தார். அப்பொழுது தினம், அவர் அருகே உட்கார்ந்து, அவருக்காகப் பல புத்தகங்களையும், பத்திரிகைகளையும் நான் படிப்பது வழக்கம். அப்போதெல்லாம், என்னையே நான் மறந்து விடுவேன். ஏதோ தெய்வீக சக்தி ஒன்று அவரிடத்தில் இருப்பதாகவே இன்றைக்கும் நான் நினைக்கிறேன். சத்தியம், நேர்மை, சீலம் — இந்தக் கொள்கைகளுக்கு, காந்திஜியின் வாரிசு ஜெயப்பிரகாஷ்தான் என்பது எனது திடமான நம்பிக்கை. ஆகவேதான் அவர் பணியாற்றும் கட்சியில் சேவை செய்யத் துணிந்தேன். எனவே, இம்மகாநாட்டில் அவர் உருவப் படத்தைத் திறந்து வைக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்ததைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்.

தமிழ் நாட்டில், சென்ற பொதுத் தேர்தலில், ஒரே ஒரு சோஷலிஸ்டுதான் வெற்றி பெற்றார். அவர்தான் கொடுமுடி ஸ்ரீ நல்லசிவம். காங்கிரஸ் ஆட்சியில்கூட அவரைப் பாதுகாப்புக் கைதியாக வேலூர் சிறையில் வைத்திருந்தனர். பெயருக்குப் பொருத்தமான நடத்தையை உடையவர் ஸ்ரீ நல்லசிவம் என்று அவர் தொகுதி மக்கள் சொல்லுகின்றனர். விவசாயிகளுக்காக பார்டியில் சத்தியாக்கிரஹம் ஆரம்பித்ததற்காக 11 மாதம் தண்டிக்கப் பட்டிருக்கும் அரசியல் மேதை அசோக மேத்தாவின் படத்தை ஸ்ரீ நல்லசிவம் திறந்து வைத்துப் பேசினார்.

மகாநாட்டின் சார்பில் சித்திரக் காட்சி ஒன்று ஏற்பாடு செய்திருந்தனர். இக்காட்சியை, 'கவியின் கனவு', 'மனிதனும், மிருகமும்', என்ற அரிய நாடகங்களை எழுதியவரும், "கல்கி"யின் "கள்வனின் காதலி" என்ற நவீனத்தை நாடகமாக்கித் தமிழுலகிற்கு அளித்தவருமான ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் திறந்து வைத்து இலக்கியச் சுவை மிகுந்த சுருக்கமான பிரசங்கம் செய்தார்.

மாலையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்துக்குச் சுமார் 30 000 பேருக்குமேல் குழுமி யிருந்தனர். டாக்டர் மேனன் தலைமை வகித்தார். ஆச்சாரிய கிருபளானி பேசினார். சமீபத்தில் காங்கேயம் தொகுதி உப தேர்தலில் வெற்றி பெற்ற ஸ்ரீ கே. ஜி. பழனிசாமி கௌண்டரும் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினார்.

இரவு 9-மணிக்குக் கொத்தமங்கலம் ஸ்ரீ சுப்பு 'காந்தி மகான் கதை' காலட்சேபம் செய்தார். ஆயிரக்கணக்கான பெண்மணிகளும் கதையைக் கேட்கக் கூடி யிருந்தனர். ஸ்ரீ சுப்பு கதையை ஆரம்பித்தார். அவ்வளவுதான்! கதை கேட்கக் கூடியிருந்தவர்கள் தங்களை மறந்து விட்டார்கள். ஸ்ரீ சுப்புவின் உணர்ச்சிப் பிரவாகம் எடுத்தோடும் கர்ணாமிருதமான பாட்டுகளிலும், சுவையும் கருத்தும் மிக்க வசன நயத்திலும் ஈடுபட்டவர்கள் காந்திஜியின் தெய்வீக ஒளியைக்கூடப் பார்க்கும்

## நீர்ப்பாசன வசதி

திருச்சிராப்பள்ளி ஜில்லாவில், திருச்சி தாலூகாவில் காடாரம்பப் பகுதிகளுக்காக மேட்டூர் அணை கட்டப்பட்ட சமயத்தில் கால்வாய் திட்டப்படி "கட்டளை ஹை லெவல் கால்வாய்" மேற்கே மாயனூரிலிருந்து ஜில்லா கிழக்கு எல்லைக் கோடியிலுள்ள ஹநுர் கிராமம் முடிவாக மேலே கண்ட திட்டம் அங்கீகரிக்கப் பட்டு (மொத்தம் 60,000* ஏக்கர் நிலத்துக்குப் பாசன வசதி செய்து கொடுக்கத் திட்டமிடப்பட்டது) சரிவரப் பூர்த்தி செய்யப் படாமல், நடுவில் தாயனூர் என்னும் கிராமத்தோடு சுமார் 20,000 ஏக்கர்களுக்குப் பாசன வசதி செய்து கொடுத்ததுடன் நின்று விட்டது.

இதில் குறிப்பிடத் தக்கது என்னவென்றால் தாயனூர் கிராமமும் அதைச் சேர்ந்த குறுப் புங்கனூர் என்னும் கிராமமும் ரெவின்யூ நம்பர்படி ஒரே கிராமம்தான். அப்படி இருக்கத் தாயனூர் கிராமத்தை ஹைலெவல் கால்வாய் ஆயக்கட்டில் எடுத்துக் கொண்டு இந்த குறுப் கிராமம் புங்கனூரை ஆயக்கட்டில் சேர்த்துக் கொள்ளப்படாமல் இருபது வருஷகாலமாக விடப்பட்டிருக்கிறது. தாயனூரில் முடிவடைந்திருக்கும் ஹை லெவல் கால்வாயை இரண்டு பர்லாங்குகள் வெட்டி விஸ்தரித்துக் கொடுத்தால் மேற்கொண்டு சுமார் 2000 ஏக்கர்கள் சாகுபடியாகும்.

திருச்சி
4—12—53 என். ராமச்சந்திரன்

சக்தி பெற்று விடுகிறார்கள் என்று சொன்னால் மிகையாகாது. ஆச்சாரிய கிருபளானி கூட அரை மணி நேரம் கதையைக் கேட்க வந்திருந்தார். அருகில் இருந்தவர்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சொன்னார்கள். காந்திஜியோடு இருபது ஆண்டுகள் நெருங்கிப் பழகி ஊழியம் செய்த ஆச்சாரிய கிருபளானி தாம் சொல்லும் காந்தி மகான் கதையைக் கேட்கவந்தது குறித்து ஸ்ரீ சுப்பு மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். தம் வாழ்நாளிலேயே இதைப் பெரும் பாக்கியமாகக் கருதுவதாகக் கூறினார். கதையைக் கேட்ட பிரஜா சோஷலிஸ்டு ஊழியர்கள் தங்கள் கிராமங்களிலெல்லாம் இந்தக் கதையை ஸ்ரீ சுப்பு வந்து நடத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டனர்.

மறுநாள் பிற்பகல் கவி அரங்கம் ஒன்று நடைபெற்றது. சாது சு. யோகியார், ஸ்ரீ கம்பதாஸன், ஸ்ரீ எஸ். டி. சுந்தரம், ஸ்ரீ சாலிவாகனன், ஸ்ரீமதி பிருந்தா தேவியார், ஊமையம்பட்டி ஸ்ரீ சுந்தரசாமி, காரைக்குடி ஸ்ரீ கருப்பய்யா, ஜோலார் பேட்டை ஸ்ரீசோலை இருசன் முதலியவர்கள் கவியரங்கில் பங்கெடுத்துக் கொண்டனர். "புதுவாழ்வு" என்ற பொருள் குறித்து, வெகு அற்புதமாக இவர்கள் கவிதைகள் இயற்றி வாசித்தனர். ஆயிரக்கணக்கான மக்கள் கூடிக் கவிஞர்களை ஆரவாரம் செய்து அமோகமாக உற்சாகப் படுத்தினர்கள்.

"பிரஜா சோஷலிஸ்டு கட்சி மகாநாட்டுக்கும், கவியரங்குக்கும் என்ன சம்பந்தம் என்று சிலர் சந்தேகப்படலாம். சோஷலிஸம் என்பது, வெறும் அரசியல் தத்துவமோ, வறண்ட பொருளாதார சாஸ்திரமோ மாத்திரம் அல்ல. வளமிக்க வாழ்க்கையை யாவரும் வாழ்வதற்கு வழிவகுக்கும் புதியதொரு வாழ்க்கை இலக்கணம் சோஷலிஸம். வாழ்க்கை யென்று சொல்லும் போது, உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் இருந்து விட்டால் மாத்திரம் வாழ்க்கை பூரணப் பொலிவடைந்து விட்டதாகச் சொல்ல முடியாது. இலக்கியமும், கலையும் சேர்ந்த வாழ்க்கைதான், வாழ்க்கையைச் சோபிக்கச் செய்யும். அதுதான் சிறந்த பண்பாட்டுக்கும் அஸ்திவாரம். அதுமாத்திரமல்ல. ஒரு நாட்டின் மறுமலர்ச்சியில், அந்நாட்டுக் கவிஞர்களுக்கும் இலக்கிய கர்த்தாக்களுக்கும் முக்கிய பங்கு உண்டு. மகாகவி பாரதியின் கவிதைகள் தமிழ் நாட்டில் தேசியக் கனலை எழுப்பவில்லையா! ஜனநாயக சோஷலிஸ இயக்கம் மக்களிடையே பரவ இக் கவிஞர்களின் ஒத்துழைப்பு நமக்கு எவ்வளவு பக்கபலமாக இருக்கும்!" என்று கவி அரங்கத்தை ஏற்பாடு செய்த ஸ்ரீ ராதாகிருஷ்ணன், கவிஞர்களை அறிமுகப்படுத்திக் கவி அரங்கத்தின் நோக்கத்தைத் தெளிவாக எடுத்துக் கூறினார்.

கவி அரங்கிற்குத் தலைமை வகித்த தாராபுரம் தொகுதி சட்டசபை அங்கத்தினர் ஸ்ரீ சேனாபதி கவுண்டர் அவர்கள், கவிஞர்களைப் பாராட்டிப் பேசினார். "பண்டைக் காலங்களில் மன்னர் மன்றங்களிலே கவிகள் பாடிப் பரிசு பெற்றனர். இன்றோ மக்கள் மகாநாடுகளிலே பாடி மக்களை விழிப்புறச் செய்கின்றனர்" என்று கவிகளை வாழ்த்தினார். கவி அரங்கிலே இயற்றப்பட்ட தமிழ்க் கவிதைகள், சோஷலிஸ தமிழ் இலக்கியத்தில் முக்கிய இடம்பெறும் என்பதில் சந்தேகமில்லை.

வருங்கால வேலைத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு ஸ்ரீ கே. ஜகதீசனைக் கட்சியின் காரியதரிசியாகச் சேலத்தில் தேர்ந்தெடுத்துள்ளார்கள். ஸ்ரீ ஜகதீசன் என். ஜி. ஓ.க்களின் சங்கக் காரியதரிசியாக இருந்து மத்தியதர வர்க்கத்தினரின் மகத்தான போராட்டத்தைத் தலைமை தாங்கி நடத்தியவர். தமது அரசாங்கப் பதவியையும் ராஜிநாமா செய்து கட்சியில் பணியாற்றி வருகிறார். அவரது தியாகம் மகத்தானது. ஒரு ஆண்டு பொறுத்திருந்தால் மாதம் 200 ரூபாய் பென்ஷன் கிடைத்திருக்கும். ஆனால் அதையும் தியாகம் செய்துவிட்டுக் கட்சியிலே சேர்ந்து பணியாற்றி வருகிறார். இன்று கட்சியைக் கட்டி வளர்க்கும் பொறுப்பும் அவர்மீது சுமத்தப் பட்டுள்ளது.

மற்ற அரசியல் கட்சிகளிலே காணும் பிணக்குகளை இக்கட்சியிலே காண முடியாது. போட்டியும் பூசலும் இங்கேயில்லை. இம் மகாநாட்டுக்கு வந்த ஸ்ரீ ச. து. சு. யோகியாரும் ஸ்ரீ சுந்தரமும் "நாட்டிற்கு நல்ல காலம் உண்டு என்ற நம்பிக்கை உதயமாகிறது, உங்கள் மகாநாட்டைப் பார்த்த பிறகு" என்று சொன்னார்கள். "கவிகளின் வாக்கு பலிக்க, பாரதியின் கனவை நிஜமாக்க, காந்திஜியின் லக்ஷியத்தை உருவாக்க உத்தமன் ஜயப்பிரகாஷின் தலைமையிலே நாட்டுக்கு உழைத்துச் சேவை செய்ய நாங்கள் உறுதி கொண்டு விட்டோம்" என்று சேலத்தில் கூடிய பிரஜா — சோஷலிஸ்டு ஊழியர்கள் பிரதிக்ஞை செய்து கொண்டனர்.

இம் மகாநாட்டின் வெற்றிக்கு முக்கிய காரணமாயிருந்த வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ வெ. ஜி. செட்டியார், காரியதரிசி ஸ்ரீ ஏ. சுப்பிரமணியம், மற்றும் இரவு பகல் பாராது சேவை செய்த ஊழியர்கள் அனைவருக்கும் தமிழ்நாடு பிரஜா-சோஷலிஸ்டுகளின் சார்பில் நன்றி செலுத்துகிறேன்.

"ஆஹா! என் எதிர்கால வாழ்க்கையே வாழக்கை...இவ்வைந்து வருடங்கள் எனக்கு எவ்வளவு நன்மைகளை அளிக்கப்போகின்றன! அதோ - ஆற்றின் நடுவே எஃகாலும் கான்க்ரீட்டாலும் ஓர் பிரம்மாண்டமான சுவர் எழுப்பப்படுகிறது....ஆம், அவர்கள் அணை கட்டுகிறார்கள். இனி பரந்து கிடக்கும் எங்கள் வயல்களுக்கெல்லாம் நீர்ப் பாய்ச்சுவதற்கு வேண்டிய தண்ணீர் கிடைக்கும். இனி நாம் வானத்தை நோக்கிக் காத்திருக்க வேண்டியதில்லை!"

இவ்வெளிய உழவனின் ஆசை வார்த்தைகள் நம் மக்களின் உயரிய எண்ணத்தை உறுதிப் படுத்துகின்றன. விவசாயத்தின் நிலையை உயர்த்தி, வறுமை மிஞ்சிய இந் நாட்டை வளம்பெறச் செய்ய ஐந்து வருடத்திட்டத்தில் 795 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வரிய தேசிய திட்டத்தில், நம் விவசாயிகளின் ஒத்துழைப்பு இன்றியமையாதது. உண்மையில், இவர்கள் கையில்தான் நம் நாட்டின் எதிர்கால சுபிக்ஷம் இருக்கிறது.

## செழுமை மிக்க அறுவடை

இவ்வைந்து வருட திட்டத்தின் பல்வேறு சாதனங்களில் பல்லாயிரக்கணக்கான டன் எஃகு உபயோகிக்கப்படும். ஆதலால் நம் நாட்டு மக்களின் வருங்கால வாழ்க்கையை செழிப்புறச் செய்வதில் எஃகானது எண்ணற்ற விதங் களில் ஈடுபடும்.

**தி டாடா அயரன் அண்ட்
ஸ்டீல் கம்பெனி லிமிடெட்**



TN 3932




அமைதி நிறைந்து, சலனமற்றிருந்த என் மனத்தில் வேதனை அலைகளைக் கிளறிவிட்டுச் சென்றாள் அந்தக் கிழவி. இதற்குத்தானா அவள் என்னைத் தேடி வந்தாள்! பேச்சுக் கொடுத்தாள்! யார் அவளைக் கூப்பிட்டார்கள்! வந்தவள் சும்மா யிருந்து விட்டுப் போயிருக்கக் கூடாதா! என்னுடைய நல் வாழ்வில் அக்கறை காட்டுகிறாளாம்! அதற்காக எதை யெல்லாம் என் காதில் போட்டு விட்டாள். நிம்மதி இழக்கும்படி செய்துவிட்டாள். இதுவரை அனுபவித்தறியாத பீதியை என்னுள்ளே ஏற்றிவிட்டுப் போய் விட்டாள். அப்பப்பா! அவள் சொன்னதை எல்லாம் எண்ணிப் பார்த்தால் எத்தனை பயங்கரமா யிருக்கிறது! அவ்வளவும் உண்மையாக இருக்குமா! உண்மையாக நடந்திருக்குமானால், நான் ஒரு துர்ப்பாக்கிய சாலியாக வேண்டியதுதான்.

லட்சுமிப்பாட்டி அவள் வீட்டுக்கு மட்டும் பாட்டியல்ல. ஊருக்கே அவள் பாட்டிதான். அதற்கு முன் நான் அவளைப் பார்த்ததில்லை. பார்க்கும்படியான வாய்ப்பு ஏற்படவில்லை. காரணம் அவள் ஊரிலில்லை. அன்று காலையில்தான் அவள் வெளியூரிலிருந்து திரும்பி வந்தாள். மகள் வயிற்றுப் பேத்திக்குப் பிரசவம் பார்க்கப் போனவள் திரும்பி வர ஆறுமாதங்கள் ஆகி விட்டன. கணவன் வீட்டுக்கு வந்து, சரியாக நான்கு மாதங்களைத் தள்ளியிருந்த நான் அவளைப்பற்றி எங்கே அறியப் போகிறேன்!

"யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே" என்பது போல, லக்ஷ்மிப் பாட்டி வருவதற்கு முன்பே "லக்ஷ்மிப் பாட்டி வரப் போகிறாள், வரப்போகிறாள்" என்ற செய்தி பிரமாதப்பட்டுக் கொண்டிருந்தது ஊர் முழுவதும். என் கணவர் கூட ஒரு நாள் "லட்சுமிப் பாட்டி வரப்போகிறாளாம். வந்து விட்டாள், ஒரு நிமிஷம் சும்மா யிருக்க மாட்டாள். இங்கும் அங்கும் போய்க் கொண்டிருப்பாள். அவளுக்கு வேண்டாதவர்கள் இங்கு யாருமில்லை. எல்லாரிடமும் சொந்தம் கொண்டாடுவாள். அவர்களுடைய சுக துக்கங்களில் பங்கு கொள்ளுவாள். வெள்ளை மனசு அவளுக்கு. மனதில் உள்ளதை மறைக்காமல் சொல்லி விடுவாள்" என்று நான் முன்பின் பார்த்தறியாத அந்தக் கிழவியைப் பற்றி வானளாவப் புகழ்ந்து அடுக்கிக் கொண்டே போனார்.

'லட்சுமிப் பாட்டி வேறு யார் வீட்டுக்கோ வரப்போகிறாள்' என்று நான் எண்ணியதற்கு மாறாக, அவள் மிகவும் நெருக்கத்தில், பக்கத்து வீட்டுக்காரியாய், கோமதி வீட்டுக்கே வருகிறாள் என்பது எனக்கு மகிழ்ச்சியே யளித்தது.

கோமதியும் நானும் சரிசமானமான வயது. இருபதை எட்டிப் பிடிக்கும் வயதுதான். ஆனால் அவளுக்கும் எனக்கும் ஒரு வித்தியாசம். பாவம், அவள் இன்னும் கன்னிப் பெண். கண்ணைக் கவரும் அழகும், தங்கமான குணமுமிருந்தும் அவளுக்குக் கல்யாணமாகவில்லை.

நான் மட்டும் என்ன வாழ்ந்தேன்! ஏதோ ஒரு குருட்டு அதிர்ஷ்டம் கல்யாணம் என்று எதிர்பாராத விதமாக நடந்தது. இல்லா விட்டால் நானும் அவளைப் போல இருந்திருக்க வேண்டியவள்தான். அவள் வந்த வழி அப்படி; நான் வந்த வழி இப்படி. யார் அதிர்ஷ்டத்தை யார் கண்டார்கள்! நாளைக்கு அவளுக்கும் என்னைப் போல ஆகலாம். எனக்கும் மேற்பட்ட அதிர்ஷ்டம் ஏற்படலாம். கடவுள் கருணையினால் அப்படி நேர்ந்தால் அவளைவிட நான்தான் அதிகம் மகிழ்வேன். ஏனெனில் என்னைப் போல அவளும் ஏழை வீட்டில் பிறந்து வளர்ந்தவள்.

எனக்காகிலும் தாய், தகப்பனிருந்தார்கள்; அண்ணன் தம்பி யிருந்தார்கள்; அக்காள் தங்கை என்று இருந்தார்கள். எல்லாருமிருந்தும், பொருளில்லாக் குறை பெரிதாயிருந்ததினால், இவ்வளவு காலம் நான் கல்யாணத்துக்கு ஏங்கி, நல்ல நாளை எதிர் பார்த்து, வீட்டு மூலையில் மறைந்து கிடக்க வேண்டியிருந்தது. பாவம், கோமதியை நினைத்தால் பரிதாபமாக இருந்தது. அவள் வீட்டுக்கு ஒரே பெண். உடன் பிறந்தவர்கள் யாருமில்லை; அவள் தந்தை யிருக்குமிடமும் தெரியவில்லை. கணவன் இருப்பதும் இல்லாததும் ஒன்றாகி, மஞ்சள் குங்குமத்தோடு காட்சியளித்த அவள் தாயும், பாட்டியும்தான் அவளுக்கு ஆதரவு. சொந்தமென்று ஒரு வீடும், அரைக் காணி நிலமும்தான் அவர்களுக்கு இருந்தன. பின் ஏன் அவள் கல்யாணம் தள்ளித் தள்ளிப் போகாது!



*காரின் சொந்தக்காரர்* (ஒரு வழிப்போக்கனைப் பார்த்து) :— என் அப்பா, பெட்ரோல் ஸ்டேஷன் இங்கிருந்து எவ்வளவு தூரம் இருக்கும்?

*வழிப்போக்கன்* :— சுமார், ஒரு காக்காய் பறந்து செல்லும் தூரம் இருக்கும்.

*காரின் சொந்தக்காரர்* (யோசனை செய்து விட்டு):— அப்படியென்றால், அந்தக் காக்காய் பறக்காமல் 'டயரை' உருட்டித் தள்ளிக் கொண்டு நடந்து போவதென்றால் எவ்வளவு தூரம் இருக்கும்?

---

என் கல்யாணமும் அப்படித் தள்ளித் தள்ளித் தான் போய்க் கொண்டிருந்தது. வயதும் அதிகமாகிக் கொண்டு வந்தது. யார் யாரோ வந்து என்னைப் பார்த்து விட்டுப் போனார்கள். வந்தவர்கள் எல்லோருமே தேனொழுகத்தான் பேசினார்கள். பெற்றோரும் சரி, பிள்ளையாண்டானும் சரி, "எங்களாலேதான் இந்த உலகம் உய்ய வேண்டும். இருப்பவன், இல்லாதவன் என்ற பாகுபாடின்றி எல்லோரும் சரிசமானம் என்ற உண்மை நிலைமையே ஏற்பட வேண்டும். அதற்கு வழிகாட்டியாக நாம் இருக்க வேண்டும்" என்று பலவாறாகப் பேசினார்கள். என் பெற்றோர்களுக்கு நம்பிக்கை யூட்டினார்கள். "இத்தனை நாட்களுக்குப் பிறகு, இப்பொழுதாவது மகளுக்குக் கல்யாணம் ஆகும் போலிருக்கே" என்று அவர்கள் மகிழ்ந்திருப்பார்கள்.

'எனக்கும் விடிவு காலம் பிறந்து விடும். பெற்றோர்களுக்கு நான் பாரமாயிருப்பதும் நீங்கிவிடும்' என்று எண்ணி நானும் மகிழ்ந்திருக்கிறேன். ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகள் இப்படி. ஒவ்வொரு முறையும் ஏமாற்றமடைந்தது தான் மிச்சம். "பெண்ணாய் ஏன் பிறந்தேன்!" என்று என் விதியை நிந்தித்துக் கொண்டதோடு நான் சும்மாயிருந்து விட்டேன். மனப் பாரம் மட்டும் மலைபோலக் கனத்து என்னைக் குன்றச் செய்தது.

என் தந்தை ஒரு ஏழைக் குமாஸ்தா. அவருக்கு வரவுக்கு மீறின ஆறும் பெண்ணாக எட்டுக் குழந்தைக் குட்டிகள். இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்து, அவர் களைத்துப் போயிருந்தார். பிள்ளை வீட்டாரின் கோரிக்கைகளையும், மற்றச் செலவுகளையும் சமாளிக்க நான் பருவ வயதை எட்டியபோது அவரால் முடியவில்லை. குடும்ப நிலைமை அப்படி இருந்தது.

என்னை நினைக்கும்போது என் அண்ணா கவலையில் ஆழ்ந்து விடுவான். "விமலாவுக்குக் கல்யாணம் என்று ஆகிவிட்டால் போதும் என் கவலை விட்டது. மற்றவர்களைப் பற்றி நான் கவலைப் படவே மாட்டேன்" என்று அவன் அடிக்கடி சொல்லுவான். ஊரில் இருக்கும் அத்தனைத் தெய்வங்களையும் பிரார்த்தனை செய்து கொள்வான்.

"விமலாவிற்கு அழகிருக்கு. குணத்துக்கும் எவனாவது வந்து [illegible] கொத்திக் கொண்டு போய்விடுவான். நமக்கு எந்தச் செலவும் இருக்காது" என்று தந்தை கூறுவார்.

அவர் சொன்ன அந்த 'எவன்' அவ்வளவு சீக்கிரத்தில் வந்து வாய்க்கவில்லை. வீட்டில் எல்லோரும் கவலைப்பட்டு, கண்ணீர் விடாத குறையாக, நம்பிக்கை இழந்து போயிருந்த நிலையில்தான் அவர் வந்து சேர்ந்தார். என்னைப் பற்றியும் எங்கள் வீட்டைப் பற்றியும் எப்படியோ அவர் கேள்விப் பட்டிருந்திருக்கிறார்.'

தனியாளாகத்தான் வந்தார். மறைவிடத்திலிருந்து, அவரைப் பார்த்ததுமே எனக்குப் பிடித்துப் போய் விட்டது. வயது முப்பதுக்கு மேலிருக்காது. சிரித்த முகம்; அழகு மேனி; கவர்ச்சி நிறைந்த கம்பீரத் தோற்றம். என் மனத்தில் அல்லும் பகலும், ஊர் பேர் தெரியாத எந்த என்னுடைய 'அவரை' நினைத்து வந்தேனோ அந்த அவர் இவராகத்தானிருக்கவேண்டும் என்று எனக்கு அப்பொழுதே தோன்றி விட்டது.

அவர் பெயர் சுந்தரமூர்த்தி என்று சொன்னார். கிராமத்தில் பெரிய மிராசுதாராம். பெற்றோர்களும், உடன் பிறந்தவர்களும் இல்லையாம். முதல் மனைவி இறந்து மூன்று வருஷங்கள் ஆகியிருந்தனவாம். என்னை இரண்டாம் தாரமாகக் கொள்ளத்தான் அவரே புறப்பட்டு வந்தார்.

"எனக்குப் பெண்ணைப் பார்க்க வேண்டுமென்ற அவசியமில்லை. அவளைப் பற்றி நான் கேள்விப் பட்டதே எனக்குத் திருப்தி யளிக்கிறது. ஆனால் ஒன்று. பெண் என்னைப் பார்த்து விடுதல் நல்லது. என்னை இரண்டாம் தாரமாக மணக்கச் சம்மதம் என்று என் காது குளிரச் சொன்னால் போதுமானது. கல்யாணச் செலவுகளை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று அவர் சொல்லிக் கொண்டு போனார்.

அன்னையும், தந்தையும் வியப்பினால் வாயடைத்துப் போனார்கள். இத்தகைய ஒரு நல்ல சந்தர்ப்பத்தை, அதிர்ஷ்டத்தை அவர்கள் எதிர்பார்த்திருக்கவில்லை. இப்படிக் கை கொடுத்து, அணைக்க வந்த இந்தப் பெருமகனாரின் அருங் குணத்தை எப்படி வியப்பது என்றே எனக்குத் தெரியவில்லை. மகிழ்ச்சிப் பூரிப்பில் என் கால்கள் தரையில் பாவவே யில்லை. கரை, வரை தெரியாத ஏதோ ஒரு இன்ப புரியில் அப்பொழுதிலிருந்தே நான் இருப்பது போலத்தான் உணர்ந்தேன்.

அதிகம் வளர்த்துவானேன். எனக்கும் அவருக்கும் நல்லதொரு நாளில் திருமணம் வெகு வெகு சிறப்பாக நடந்தேறியது. நானும் அவருடைய ஊருக்குக் குடித்தனம் செய்ய வந்தேன்.

கிராமத்தில் மிகப் பெரிய மிராசுதார் என் கணவர்தான். நானே வீட்டு எஜமானி. மாமியார் நாத்தனார் உபத்திரவமில்லை. எல்லா இன்பத்தினையும் துய்க்கவே நான் பெண்ணாய்ப் பிறந்தது போல என் தலை கர்வத்தினால் கனத்துப் போயிற்று.

என் கணவர் என்னிடத்தில் அன்பு செலுத்தினார். அதற்கு வரைமுறை என்பதே கிடையாது. நான் ஒரு இளையதாரம் என்ற எண்ணமே எனக்கு எழவில்லை. அவரும் சரி, முதல் மனைவியை இழந்த பின், தம் மனத்தைக் வறண்ட பாலைவனமாக ஆக்கிக் கொள்ளாமல், பாசத்துக்கும் நேசத்துக்கும் பஞ்சமின்றி, புது மண வாழ்வில் அப்பொழுது தான் இறங்கியவர்போல் உல்லாசமாகக் காணப் பட்டார். நாங்கள் ஒருவர் மனத்தினை ஒருவர் மறைக்கவில்லை. மனம் விட்டுப் பழகினோம். ஒருவரோடு ஒருவர் இழைந்தோம்; குறை காணக் கூடிய வாழ்வில், இணைபிரியாச் சிட்டுக் குருவிகள் போன்று, மகிழ்வு நிறைவோடு மிதந்து கொண்டிருந்தோம்.

நான் இங்கு வந்த முதல் நாளிலிருந்தே கோமதி என்னுடன் நட்புக் கொண்டாள். பக்கத்து வீட்டுப் பெண்ணாய் அவள் இருந்ததினால், நாங்கள் இணைபிரியாத உயிர்த் தோழிகளாக முடிந்தது.

கல்யாணத்தை எதிர் பார்த்து ஏங்கி நின்ற அவள் தன் கவலையை மறக்க என்னுடன் கொண்டிருந்த நட்பு பேருதவி செய்திருக்க வேண்டும். என் கணவர் வீட்டில் இல்லாதபோது அவள் என் வீட்டுக்கு வந்து விடுவாள். நிறைய நிறையப் பேசுவாள். உள்ளம் விட்டுப் பழகுவாள். கபடு சூது இல்லாத தங்கம் போன்ற குணம் படைத்தவள் அவள். அந்த ஊரில் கோமதியுடன் நான் பழகியதுபோல், வேறு யாருடனும் பழகவில்லை. அவள் சுக துக்கங்களில் பங்கு கொள்ளும் அளவு எங்கள் நேசம் விரிவடைந்திருந்தது. அவளுக்கு என் மீதுள்ள வாஞ்சையும், வற்றாத அன்பும் கொஞ்ச நஞ்சமல்ல.

இத்தகைய தோழி லட்சுமிப் பாட்டி வருவதற்கு முன்பிருந்தே ஊரிலில்லை. அவள் மாமன் வீட்டுக்குப் போயிருந்தாள். கிழவியும் பேத்தியை விட்டு விட்டுத் தான் மட்டும் வந்திருந்தாள். அதனால் அவள் லட்சுமிப் பாட்டி வருவது பற்றி எனக்குச் சொல்ல முடியவில்லை. தனக்கு ஒரு பாட்டியிருக்கிறாள் என்று மட்டும் அவள் சொன்னாளே யொழிய அவள் பெயர் என்ன, குணம் என்ன என்பதைப் பற்றி அவள் சொல்லவில்லை; சொல்ல அவசியம் ஏற்படவில்லை.

அன்று அதிகாலையிலே வந்து பக்கத்து வீட்டில் பாட்டி இறங்கும்போது நான் பார்த்துக் கொண்டிருந்தேன். பழுத்த பழமாய் வயசு எழுபது என்று எண்ணும்படி அவள் இருந்தாள்.

அன்று பார்த்து, என் கணவரும் ஏதோ ஒரு அவசர வேலையாய், வெளியூர் செல்ல நேர்ந்தது. மறு நாள் காலையில் வருவதாகச் சொல்லி விட்டுப் போனார். அன்றிரவு எனக்குத் துணையாக வேலைக்காரியை ஏற்பாடு செய்து விட்டுப் போனார்.

ஊருக்கு வந்ததும், வராததுமாக, அன்று மத்தியானமே லட்சுமிப் பாட்டி என்னைத் தேடிக் கொண்டு வீட்டுக்கு வந்து விட்டாள்.

"வாருங்கள், பாட்டி" என்று அவளை அன்போடு வரவேற்றேன்.

கிழவி வந்தமர்ந்தாள். தன் பொக்கை வாயைத் திறந்து சிரித்தாள்.

"உன் பெயர் என்ன! என்னமோ என்று சொன்னாள் என் மருமகள். மறந்து போயிட்டேன்."

"என் பெயர் விமலா பாட்டி!"

"என் பேத்திக்கு நீ ரொம்ப ரொம்பச் சிநேகிதமாமே. உன்னைப் பார்த்தால் நல்ல பெண்ணாய்த் தானிருக்கிறாய். உன் அப்பா அம்மாவுக்கு இந்த அவசரம் கூடாது. எதையும் கொஞ்சமாவது யோசித்துச் செய்திருக்கணும்."

"என்ன பாட்டி சொல்கிறீர்கள்!"

"சொல்லத்தானே வந்திருக்கிறேன்! உன் கல்யாண விஷயத்தில் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டார்கள்......"

"விவரமாகச் சொல்லுங்கள் பாட்டி!"

"போயும் போயும், கண்ணிருந்தும் உன்னை இந்தப் பாழும் கிணற்றில், கொண்டு வந்து அவர்கள் தள்ளியிருக்க வேண்டியதில்லை."

"அப்படியா!"

"ஆமாம்! சுந்தரி, அவள்தான் உன் மூத்தாள் இருந்தாளே அவளை இந்தச் சுந்தரமூர்த்தி என்ன கொடுமைப் படுத்தி விட்டான் தெரியுமா! அவன் குணம் ஒரு வெறிக்குணம். சுந்தரி புண்ணியவதி; அவளாக இருந்ததனால்தான் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டாள். அவள் பொறுமை யாருக்கு வரும்! இவனோடு நீ எப்படிக் காலந் தள்ளப் போகிறாயோ! அதை நினைத்தால்தான் என் மனசுக்குக் கஷ்டமாயிருக்கிறது. எங்கள் கோமதிக்கு என்ன குறைச்சல்! அவளைக் கொடுங்கள், கொடுங்கள் என்று கெஞ்சிப் பார்த்தான் இந்தச் சுந்தரமூர்த்தி. நாங்கள் கொடுப்போமா! கண் முன்னால் நாங்கள் எல்லாவற்றையும் பார்த்திருக்கிறோமே. ஆயிரம்தான் நாங்கள் ஏழைகளாக இருக்கட்டுமே. அதற்காக எங்கள் பெண்ணை இப்படிக் கொண்டு போய்த் தள்ளிவிட மாட்டோம். கடைசியில் உன் பெற்றோர்கள் ஏமாந்து விட்டார்கள். நீ அவனுக்கு அகப்பட்டு விட்டாய். ஐயோ பாவம்!......"

இப்படிப் பாட்டி கூறியதும், என் மனசில் சுரேல் என்றது. அவளிடத்தில் எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்போல் தோன்றியது.

"என்ன நடந்தது பாட்டி! என் கணவர் என்ன செய்தார்! ஒன்று விடாமல் சொல்லுங்கள்" என்றேன். என் மனசில் பயம் நிறைந்த ஆவல்தான் மிகுந்து காணப்பட்டது.

கிழவி சாவகாசமாகக் காலை நீட்டிப் போட்டுக் கொண்டு சொன்னாள்.

அவள் சொன்ன விவரம் இதுதான்:

"சுந்தரி அவன் கணவன் சுந்தரமூர்த்தியோடு இரண்டே இரண்டு வருஷங்கள்தான் குடித்தனம் பண்ணினாள். அவளும் ஏழை வீட்டுப் பெண் தான். அவள் அவனிடத்தில் படாதபாடு பட்டு விட்டாள். நின்றால் குற்றம்; உட்கார்ந்தால்



குற்றம்; படுத்தால் குற்றம்; பேசினால் குற்றம்; பேச்சுக்குப் பேச்சு, வார்த்தைக்கு வார்த்தை, நடத்தைக்கு நடத்தை சுந்தரியிடம் குற்றம் கண்டான் அவன். அவனிடம் மிருக குணம் தன்னிருந்து காணப்பட்டது. வீட்டில் சதா சண்டை சச்சரவுதான்; இத்தனைக்கும் மாமி, நாத்தி என்ற பிடுங்கல் கிடையாது. எல்லாமே அவனுகி, கொடிய அசுரனாகவே அவன் விளங்கினான். அடிக்கக் கிளம்பி விட்டால், மூஞ்சி, முகரை என்று பார்க்க மாட்டான். இரத்தம் காணும் வரையில் மனைவியை அடிப்பதை அவன் நிறுத்த மாட்டான் இத்தனைக்கும் அவள் அழமாட்டாள்; சத்தம் போட மாட்டாள்; ஊரைக் கூட்டிவிட மாட்டாள். பொறுமையாகத் தன் மேல் வாங்கிப் போட்டுக் கொள்வாள். கணவன் இவ்வளவு தூரம் கொடுமை பண்ணுகிறானே என்று தாய் வீட்டுக்குப் போய் விடமாட்டாள். செத்தாலும், கொண்ட கணவன் கையினாலேயே சாக வேண்டும் என்ற எண்ணம் அவளுக்கு. ஒரு சமயம், அவன் அடித்த அடியில் அவளுக்கு முன் பல் இரண்டு உடைந்து விட்டது. இப்படி அடித்து அடித்து அவள் பற்களையெல்லாம் போக்கி விட்டான். அவள் ஒருநாள் ஒரு பொழுதுகூட "நீ பாவி! கொலைகாரன்! என்னைப் போட்டு வதைக்கிறாய்" என்று சொன்னவள் இல்லை.

"குழம்பில் ஒரு கல் உப்பு அதிகமாகி விட்டதாம். என்னதான் ஆயிரம் தேர்ந்தவளா யிருந்தாலும், கொஞ்சம் நிதானம் தவறத்தான் தவறும். அதற்காகக் குழம்புச் சட்டியையே அவள் தலையில் போட்டுக் கவிழ்த்ததை நீ எங்காவது கண்டதுண்டா, கேட்டதுண்டா!

"குழந்தை பிறப்பதும் பிறக்காததும் யார் கையிலிருக்கிறது! அதற்கு அவள் என்ன செய்வாள்! என்னதான் அப்படி அவசரமோ! கல்யாணமாகி இரண்டு வருஷத்திற்குள் குழந்தை பிறந்தால்தானா பிறந்ததா! அங்கங்கே ஒவ்வொருத்தி கிழவியாகப் போய்க் கூடப் பிள்ளை பெற்றெடுத்திருக்கிறாளே. இதற்காக எந்த மனிதன் தன் மனைவியைப் போட்டு அடிப்பான்! அடித்தால், அழுதால், வயிறு தானே திறந்து கொள்ளுமா! அதற்குக் காலம் வரவேண்டாமா! இந்த அக்கிரமம் எங்கு நடக்கும்! எல்லாம் இங்கே தானடியம்மா நடந்திருக்கிறது. உன் கணவன்தான் அப்படிச் செய்திருக்கிறான். எல்லாவற்றையும் சுந்தரி இந்த பூமாதேவிபோல் பொறுத்துக் கொண்டிருந்தாள்.

"சுந்தரமூர்த்தி அவளை அணு அணுவாய், அடித்து, உதைத்து, அவள் உயிரை வதைத்துக் கொண்டே வந்திருக்கிறான். ஒரு சமயம் அவளைப் பிடித்து அவன் அடித்து உதைத்த, படாத இடத்தில் பட்டு, பொறி கலங்கி அவள் உயிரையே விட்டு விட்டாள்.

"சுந்தரி, உத்தமி. 'கல்லானாலும் கணவன்; புல்லானாலும் புருஷன்' என்ற நம் நாட்டுப் பழக்கப்படி, கணவனிடத்தில் குறைகாணாமல் எல்லாக் குறைகளையும் தன்மீது சுமந்து, பெண்ணாய்ப் பிறந்த தோஷத்துக்காக உயிரையே விட்டாள். அவளைக் கோவிலில் வைத்துக் கும்பிட வேண்டும். அவளைப்போன்ற மனத்தைரியம் வேறு யாருக்கும் வராது. எனக்கும்தான் இத்தனை வயசு ஆகிறது. நானும் குடித்தனம் பண்ணினேன். குழந்தை குட்டிகள் பெற்றேன். இப்படி நடந்ததில்லை. வேறு எங்கும் இதுமாதிரி நடந்து நான் கேள்விப்பட்டதில்லை"

கிழவி சொல்லி நிறுத்தினாள்.

என் நிலையை நினைக்கும்போது எனக்கு அழுகையே வந்து விட்டது. 'நான் எப்படித்தான் இங்கு குடித்தனம் பண்ணப் போகிறேனோ' என்று எண்ணியபோது என்னை யறியாமலே தாரை தாரையாகக் கண்ணீர் விட்டு விட்டேன். மனதைப் பீதி பனிமூட்டம்போல் சூழ்ந்து கவிந்து கொண்டது.

"ஏனடி பெண்ணே, அழுகிறாய்! அழுதால் தீர்ந்து விட்டதா! வருவது வழியிலேயே நின்று விடுமா! வந்து அகப்பட்டுக் கொண்டாய். புத்தியாய்ப் பிழைக்கப்பாரு. ஜாக்கிரதையாய் இருந்து கொள். எதையும் மனதில் வைத்து மாய்த்துக் கொள்ளாதே. அவன்தான் மூடம், அப்படிப் போனான். நீயும் அப்படி யிருந்து விடாதே என்று சொல்லத்தான் வந்தேன். பக்கத்து வீட்டுக்காரியா யிருந்ததினால் எனக்கு இதெல்லாம் தெரியும். வேறு யாருக்கும் இந்த ஊரில் இது தெரியாது. அப்பப்போது நடப்பதை உன் பெற்றோர்களுக்கு எழுதித் தெரியப்படுத்தி விடு. பேசாமல் இருந்து விடாதே" என்று லட்சுமிப் பாட்டி மிகவும் அக்கறையோடு சொன்னாள்; போய் விட்டாள்.

அவள் போய் விட்டாலும், அவள் வாய் விதைத்து விட்டுப் போயிருந்த அச்சப் பயம் என் மனத்தை உறுத்தியது. கூரிய முட்களைக் கீழே வைத்து, அதன்மேல் பஞ்சு மெத்தைபோட்டு உட்கார்ந்திருப்பது போலத் தோன்றியது. பஞ்சு கொஞ்சம் கொஞ்சமாக இடம் கொடுத்துக் கொண்டே வந்தால் முள் ஊடுருவிப் பாய்ந்து, உடம்புக்கு ஊறு செய்யாமல் இருக்க விடாதே. 'என் நிலையும் இப்படித்தானு! நிறைப் பணக்காரியாகி விட்டேன். என்னைப்போல அதிர்ஷ்டம் செய்திருக்கிறவர்கள் யார் இருக்கிறார்கள் என்று எண்ணியதெல்லாம் வீண் நினைவுதானு! அன்பான கணவர்; சுகமான வாழ்க்கை; மாடமாளிகை; அது இது என்று மயக்கும் பொருள்களைக் கண்டு நான்தான் ஏமாந்து போய் விட்டேனு! ஆனா, அன்பே உருவாய், சாந்த சொரூபியாக இருக்கும் என் கணவரா அவ்வளவு கொடியவராக விருந்திருக்கிறார்! பார்த்தால் அப்படித் தெரியவில்லையே. பசுத்தோல் போர்த்திய புலியா அவர்! நான் பார்த்தவரைக்கும் அவர் அப்படி யிருக்கவில்லை. 'விமலா, விமலா' என்று என்னை வளைய வளையச் சுற்றி வருகிறார். அன்பு வார்த்தைகளைக்



"நானும் என் மனைவியும் எல்லா விஷயங்களிலும் ரொம்பவும் ஒத்துமையா யிருப்போம் தெரியுமா?"

"சரிதான். நீங்கள் சொந்த அபிப்பிராயம் என்று ஒன்றை வைத்துக் கொள்ளுவதில்லையாக்கும்!"

கொட்டுகிறார். ஆடை ஆபரணங்களினால் என்னை அலங்கரித்து அழகு பார்க்கிறார், மகிழ்கிறார்! சேச்சே! இவ்வளவு நல்ல கணவரை எவளோ முன்பின் பார்த்தறியாத கிழவி, கோமதியின் பாட்டி என்று என்னிடம் வந்து சொன்னால், அதற்காக என் கணவர் ஒரு நொடியில் கெட்டவராகி விடுவாரா! சுந்தரி டைபாய்டு ஜுரத்தால் இறந்ததாகச் சொன்னாரே! இது ஏன் உண்மையாக இருக்கக்கூடாது! யார் என்ன சொன்னாலும் நான் பயந்து ஓடிப் போய்விடப் போவதில்லை. அதற்காக என் கணவரை வெறுக்கப் போவதில்லை' இப்படிப் பலவாறு எண்ணி எண்ணி மனதைத் திடப்படுத்திக் கொண்டேன்.

என்ன இருந்தாலும், பெண்புத்தி பின்புத்தி தானே! என்னுள்ளே கிழவியின் வார்த்தைகள் வேர்த்து விட்டுப் போயிருந்த என் கணவரைப் பற்றிய பயம் மட்டும் நீங்கவில்லை. அது என்னுள்ளே நிமிஷத்துக்கு நிமிஷம் வியாபித்துக் கொண்டு வருவதுபோலத்தான் தோன்றியது.

'லட்சுமிப் பாட்டி சொன்னது எல்லாமே ஏன் உண்மையாக இருக்கக் கூடாது! அவள் யார்! நான் யார்! இவ்வளவும் வந்து சொல்ல அவளுக்கு என்ன அக்கறை! பெண்ணுக்குப் பெண் இரங்குவது ஒரு குற்றமா!· தனக்குத் தெரிந்ததைச் சொல்லி, புத்தியோடு இருக்கும்படி சொல்லி விட்டுப் போயிருக்கிறாள். இல்லாவிட்டால் ஏன் வந்து சொல்கிறாள்! முதல் மனைவி சுந்தரியைப் பற்றி அவர் இது வரைக்கும் ஒரு வார்த்தைகூடப் பேசாதது இதனால்தானோ? இருக்கும், இருக்கும்! கண் கெட்டபின் சூரிய நமஸ்காரம் செய்து பிரயோசனமில்லை. ஏமாந்து போயாச்சு. எதிர்காலம் எப்படி இருந்து விட்டாலும், சமாளிக்க வேண்டியதுதான். முடியாவிட்டால் குளம், குட்டை இருக்கவே இருக்கிறது. பார்த்துக் கொள்ளலாம்.'' இப்படி அடுத்துத் தோன்றிய மறு நினைவு கிழவியின் பேச்சை அப்படியே நம்பும்படி செய்து, என் கணவரை மனைவியை வதைக்கும் ஒரு கொடியவராக அஞ்சி வாழும்படி செய்து விட்டது. இந்தப் பயமே என்னிடம் ஸ்திரமாக நிலைத்து நின்றுவிடும் போலிருந்தது.

எனக்கு எதிலுமே புத்தி செல்லவில்லை. ''மாலைக்கு அவர் வந்துவிடப் போகிறார். அவர் முகத்தில் எப்படி விழிப்பது! அவரைப் பார்க்காமலே இருந்து விட்டால் நல்லது. இன்று ராத்திரியே ஏதாவது பேயறைந்து, என் உயிரை வாங்கிக் கொண்டு விட்டாலும் நல்லதுதான். நல்லது, கெட்டது எதையும் அனுபவிக்காமல் போய்விடலாம்'' என்று என் சிந்தனை ஓடியது.

சோர்ந்து, அசந்து போய் உட்கார்ந்து விட்டேன். எனக்கு இருப்பு கொள்ளவில்லை. நானிருந்த வீடு ஏதோ ஒரு பயங்கரப் பாதாளச் சிறை போலத்தான் காட்சி யளித்தது. தனிமையின் சூழ்நிலையில், பீதி நிறைந்த மனத்துடன், வீட்டில் அங்கும் இங்குமாக நடை பழகிக் கொண்டிருந்தவள், திடீரென்று தோட்டத்துப் பக்கம் போனேன்.

அதே லட்சுமிப் பாட்டி பக்கத்து வீட்டிலிருந்து பேசும் குரல் கேட்டது. மறைவாக நின்று கவனித்தேன். அவள் கோமதியின் தாயாரிடம்தான் பேசிக் கொண்டிருந்தாள்.

''அடியே! கொஞ்சம் நீர்த்துக் கொண்டு வந்து விட்டேனடி! அந்தச் சுந்தரமூர்த்திக்கு என்ன திமிரு பாரடி! கிளி போல நம் பெண் கோமதியிருக்க அவளைக் கல்யாணம் செய்து கொள் என்று அவன் வீட்டுக்கு நாம் நடையாய் நடந்தும், அவளை விடுத்து, எங்கோ கிடந்த மூதேவியைக் கொண்டு வந்து அவன் வாழ்வதா! கோமதியின் வாழ்வை இவள் அபகரித்துக்கொண்டுவிட்டாளே! என்ன அக்கிரமம்! அவளைப் பற்றி இல்லாத துஷணைகளை எடுத்துக் கட்டி, அந்த அசட்டுப் பெண் காதில் போட்டுவிட்டு வந்து விட்டேன். அவளும் நம்பிவிட்டாள். அவள் எங்கேயிருந்து அவனுடன் வாழப் போகிறாள்! பயத்தால் ஒரு நாளைக்குச் சொல்லாமல் ஓடிப் போகத்தான் போகிறாள். அவனுக்கு அப்படித்தான் வேண்டும்; நன்றாய் வேண்டும். அவனை அழ அழப் பார்க்க வேண்டும்!'' என்று கிழவி தன் வீரப் பிரதாபத்தைச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

''ஏன் நீங்கள்! இப்படிச் செய்து விட்டீர்கள்! கெட்ட நினைப்பும், கேடு கெட்ட புத்தியும் ஆகாதே! என்ன பாவம் செய்தோமோ, நாம் இப்படி இருக்கிறோம். இந்தப் பாவத்தை வேறு கட்டிக் கொள்ள வேணுமா! கோமதிக்கு இது தெரிந்தால், அப்படியே நாக்கைப் பிடுங்கிக்கொண்டு செத்துப் போய் விடுவாள். கோமதியும் அவளும் உயிருக்குயிராய் இருக்கிறார்கள். நீங்கள் இப்படிச் செய்து விட்டீர்களே!'' என்று கோமதியின் தாய் மிகவும் வருத்தத்துடன் கூறினாள்.

''நீ சும்மாயிருடி! நீ மகா புத்திசாலிதான் போ! எனக்குத் தெரியாதது, உனக்கு நிறையத் தெரிந்து விட்டதாக்கும்'' என்றாள் லட்சுமிப் பாட்டி.

அதற்கு மேல் நான் ஏன் அங்கு நிற்கிறேன்! அவர்கள் வேறு என்ன பேசிக் கொண்டால்தான் எனக்கு என்ன! என் பயம் நீங்கிற்று. மனம் தெளிவு பெற்றது. என் கணவர் காக்கும் கடவுளாகவே எனக்குத் தோன்றினார்.

நல்ல கூனிக் கிழவி அந்த லட்சுமிப் பாட்டி! பொறாமை செய்த வேலைதானா இது! அடேயப்பா, இந்த அருவை செய்யும் துவேஷம்தான் என்னே! ஒரு நிமிஷத்தில் என்னை மிரள மிரள அடித்து



''என் பெண் ரொம்ப நன்றாய்ப் பாடுகிறாள். நீங்கள் நடத்தப் போகும் நாடகத்தில் அவசியம் அவளுக்கு ஒரு 'சான்ஸ்' கொடுக்க வேணும்!''

''அது சரி, நீங்கள் சொன்னால் போதாது. உங்கள் பெண்ணின் பாட்டைப் பற்றி 'சர்ட்டிபிகேட்' வேண்டும்!''

''சங்கீதப் பள்ளிக் கூடத்தில் அவளுக்குக் கொடுத்த 'சர்டிபிகேட்' இருக்கிறது. அதைக் கொண்டு வந்திருக்கிறேன்!''

''நான் அதைச் சொல்ல வில்லை, ஐயா! உங்கள் பக்கத்து வீட்டுக் காரர்களிடமிருந்து உங்கள் பெண்ணின் பாட்டைப் பற்றி 'சர்ட்டிபிகேட்' வாங்கி வரவேணும்!''

விட்டானே! கண் மூக்கு வைத்து, நடக்காததை நடந்ததாகச் சொல்லி, என் கணவரை என்முன்னே கொடிய உருவில் படைத்து விட்டான்! நல்ல சாமர்த்தியசாலி. இத்தனைக்கும் அவர் அவனைப் பற்றி எவ்வளவு புகழ்ச்சியாகச் சொன்னார்! இவனைப் போயா "வெள்ளை மனசு அவனுக்கு" என்று அவர் சொன்னார்! இல்லை, இல்லை இவன் மனசு கன்னங்கரியது; துவேஷம் நிறைந்தது; கெடுக்க வழிதேடுவது.

நல்ல வேளை! கடவுள் எனக்கு நல்ல புத்தி கொடுத்தார்! தோட்டத்துப் பக்கம் போனேன். உண்மை விளங்கிற்று. இதுதான் என் அதிர்ஷ்டத்தின் சிகரம் போன்றது.

அந்தப் பொல்லாத கிழவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு எப்படி யெல்லாம் மனம் வேதனைப் பட்டேன்! ஆகா! என் கணவர் எவ்வளவு தங்கமானவர்! அவரை அடைய நான் உண்மையில் கொடுத்து வைத்தவள்தான்!

# படித்துப் பாருங்கள்!

## Dawn and Achievement of Indian Freedom

1935-ம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபையின் தங்க ஜூபிலி விழாவைப் பாரத நாடெங்கும் கொண்டாடினார்கள். அதே வருஷத்தில் சென்னை மாகாணத்திலே காங்கிரஸ் தங்க ஜூபிலி விழாவுடன் மற்றொரு தங்க ஜூபிலி வைபவமும் கொண்டாடப்பட்டது.

காங்கிரஸ் மகாசபை ஆரம்பமாகி ஐம்பது ஆண்டு ஆகியிருந்தது போலவே சேலம் ஸ்ரீ சி. விஜயராகவாச்சாரியார் தேசத் தொண்டில் ஈடுபட்டு அந்த வருஷத்துடன் அரை நூற்றாண்டு ஆகியிருந்தது. சென்னை மாகாணம் அந்த அதிசய மனிதருடைய தேசத் தொண்டின் தங்க விழாவை விமரிசையாகக் கொண்டாடியது. ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரின் அற்புத வாழ்க்கையையும் அரிய சேவைகளையும் பாராட்டி மகாத்மா காந்தி, சர்தார் பட்டேல், பாபு ராஜேந்திரப் பிரஸாத், மௌலானா அபுல்கலாம் ஆஸாத், ஸ்ரீமதி சரோஜினி தேவி, பண்டித மதன்மோகன் மாளவியா முதலிய தலைவர்கள் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்கள்.

பற்பல துறைகளில் ஈடுபட்டுள்ள ஸ்தாபனங்கள் ஜூபிலி விழா கொண்டாடுவதைக் கண்டும் கேட்டும் இருக்கிறோம். ஆனால், ஐம்பது வருஷ காலம் இடைவிடாமல் தேசத் தொண்டு புரிந்த தனியாக ஒரு பிரமுகரின் தங்க ஜூபிலி விழாவைக் கொண்டாடுவது எவரது வாழ்க்கையிலும் நிகழ்ந்திராத அதிசயம் ஆகும்.

1882-ம் வருஷம் சேலம் நகரில் நிகழ்ந்த வகுப்புக் கலவரம் சம்பந்தமாக ஸ்ரீ விஜயராகவாச்சாரியாருக்கும் சர்க்காருக்கும் நடந்த போரில் ஸ்ரீ ஆச்சாரியார் பெற்ற பிரமிக்கத் தக்க வெற்றிகள், இந்திய சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியவை.

நீதிபதியாயினும், முறை தவறி நடந்தால் அவரை ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் இலகுவில் விட மாட்டார். கோர்ட்டில் வெள்ளையரான நீதிபதி ஸ்ரீ சி. வி. ஆச்சாரியாரிடம் பகிரங்கமாக மன்னிப்புக் கேட்கும்படி நேர்ந்தது உண்டு.

இந்தியாவில் தேசிய காங்கிரஸ் மகாசபை ஏற்படுவதற்கு முன் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தை எதிர்த்துப் பேச யாரும் துணியாத அக்காலத்தில், அவர்களைத் திணற அடித்த தனிப் பெருமை ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் ஒருவருக்குத்தான் உரியது. ஆங்கிலேயர்கள் இந்தியர்களைத் துச்சமாகக் கருதிவந்த அக்காலத்தில், ஸ்ரீ சி. வி. ஆச்சாரியாரைக் கண்டு மாத்திரம் அவர்கள் கிலி அடைந்ததாக ஆங்கிலப் பிரமுகர்கள் தாங்கள் எழுதியுள்ள நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

1885-ம் ஆண்டில் இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபைக்கு அஸ்திவாரம் அமைத்து, அதை ஆரம்பித்து வைத்த பிரமுகர்களில் ஸ்ரீ சி. விஜயராகவாச்சாரியாரும் ஒருவர்.

1918-ம் ஆண்டிலே காங்கிரஸின் உரிமைப் பிரகடனத்தைத் தயாரித்தவரும் ஸ்ரீ விஜயராகவாச்சாரியார்தான்.

சைமன் கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று தீர்மானித்த சர்வ கட்சி மகாநாட்டில் ஸ்ரீ சி. வி. ஆச்சாரியார் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டது குறிப்பிடத் தக்கது.

1920-ல் நாகபுரியிலே நடந்த காங்கிரசுக்கு ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரை அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்னும் பிரேரணையை மகாத்மா காந்தி, லாலா லஜபதிராய், சி. ஆர். தாஸ், மௌலானா முகமது அலி முதலிய தலைவர்கள் ஆதரித்தனர். சுயராஜ்யம் பெறுவதற்குச் சத்தியாக்கிரக ஆயுதத்தை உபயோகிக்க வேண்டும் என்ற சரித்திரப் புகழ் பெற்ற தீர்மானம் ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் தலைமையில் நடந்த நாகபுரி காங்கிரஸில் தான் நிறைவேறியது.

இந்தியாவெங்கும் பட்டம், பதவி மோகம் தலைவிரித்தாடிய காலத்தில் ஸ்ரீ சி. வி. ஆச்சாரியார் பிரிட்டிஷ் சர்க்கார் அளித்த பட்டங்களை ஏற்க மறுத்தது அவரது சுதந்திரப் பற்றுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக அமைந்தது.

இவ்வாறாக, எல்லோரும் அதிசயிக்கத்தக்க விதத்தில் நீடித்துத் தேசத் தொண்டு புரிந்து வந்த ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் 1944-ம் வருஷம் தமது தொண்ணூற்று இரண்டாம் வயதில் இவ்வுலகை நீத்து ஜோதி வானில் இடம் பெற்றார்.

பல விதத்திலும் தனிப் பெருமையுடன் அரசியல் பீஷ்மராக விளங்கிய ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரின் வாழ்க்கை வரலாற்றையும், அவரது வாழ்க்கையில் நிகழ்ந்த பற்பல அதிசய சம்பவங்களையும் சகலரும் அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். அவ்விதம் அறிந்து கொள்வதற்கு, ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரின் பேரரும் சேலம் பிரபல வக்கீலுமான ஸ்ரீ ஆர். டி. பார்த்தசாரதி எம். ஏ., பி. எல். எழுதியுள்ள "Dawn and Achievement of Indian Freedom" என்ற நூல் மிகவும் உதவியாக இருக்கும். இந்த அரிய நூலுக்கு ராஜாஜி முகவுரை எழுதியுள்ளார்.

ஸ்ரீ சி. விஜயராகவாச்சாரியார் சேலம் வகுப்புக் கலவரம் சம்பந்தமாக பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துடன் நடத்திய போராட்டத்தின் வரலாறு குறித்து ஸ்ரீ ஆர். டி. பார்த்தசாரதி தமிழில் எழுதியுள்ள கட்டுரையை இதே இதழில் மற்றொரு பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம்.

இது போன்ற பல நிகழ்ச்சிகளை அவர் எழுதியுள்ள பெரிய ஆங்கில நூலில் காணலாம்.

புத்தகத்தின் விலை: ரூ 7-8-0; கிடைக்குமிடம்: ஸ்ரீ R. T. பார்த்தசாரதி, எம். ஏ., பி. எல், அட்வகேட், சேலம்.



# கௌரி கல்யாணம்

**– ராமப்ரியா –**

நிசப்தமான இரவின் அழகில் கலியாண ஊர் வலத்துக்கு முன்னே தோடி ராகத்தை வாசித்துக் கொண்டு சென்று கொண்டிருந்த பிரபல நாதஸ்வர வித்வான்களான பந்தநல்லூர் சகோதரர் களின் கானம் யாவருக்கும் மெய்ச் சிலிர்ப்பை உண்டாக்கியது.

நாதஸ்வர கோஷ்டிக்குப் பின்னால் வந்து கொண் டிருந்த பிரமாதமான ஊர்வலம் ஜனங்களின் கண் களையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தது. தஞ்சா வூரிலிருந்து வரவழைக்கப்பட்ட கை தேர்ந்த நிபு ணர்களின் அபூர்வ வேலைப்பாட்டினால் புஷ்பங்களி னாலேயே கப்பல் மாதிரி தோற்றத்துடன் சிங்கா ரிக்கப் பட்டிருந்த ஊர்வலம் பார்க்கப் பார்க்க யாவரையும் பரவச மூட்டியது.

ஊர்வலத்துக்குப் பின்னால் ஸ்திரீகள் புஷ்பம் வெற்றிலை முதலிய தட்டுகளுடன் அன்ன நடை போட்டு நடந்து வந்து கொண்டிருந்தனர். ஒவ் வொரு ஸ்திரீயின் புடவையையும் நகைகளையும் பார்த்த மாத்திரத்தில் அது ஒரு பெரிய பிர பலஸ்தர் வீட்டுக் கலியாணம் என்பது சொல்லா மலே விளங்கியது.

போலீஸ் ஜில்லா சூப்ரெண்டு விசுவநாதனின் ஒரே அருமைப் புதல்வி கௌரியின் கலியாணம் என்றால் கேட்க வேண்டுமா! விசுவநாதன் தம் முடைய ஒரே பெண்ணுக்கு ஐ. ஏ. எஸ். மாப் பிள்ளை கிடைத்து விட்ட பெருமையில் விம்மித மார்புடன் அங்கவஸ்திரத்தை இழுத்து விட்டுக் கொண்டு அடிக்கடி பெண்ணையும் மாப்பிள்ளையை யும் பார்த்துப் பூரித்தவாறே ஊர்வலத்துக்கு முன்னால் நடந்து கொண்டிருந்தார்.

மணப் பெண் கௌரி சுமக்க முடியாத மாலை களுடன் ஓரக் கண்ணால் கணவனைப் பாராதது போல் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தாள்.

மாப்பிள்ளை ஈசுவரன் ஐ. ஏ. எஸ். அவர்கள் சரிந்து போன தம் கழுத்து மாலைகளைச் சரிப் படுத்திக் கொண்டு புது மனைவியின் பக்கத்தில் இலேசாக உராய்ந்தபடி உட்கார்ந்தார். கணவ னின் புது ஸ்பரிசம் கௌரிக்கு இன்ப போதையை யூட்டி அவள் மனத்தைக் கிளுகிளுக்கச் செய்தது.

தங்கச் சிலை போல் புதுப் புடவை சரசரக்க மல்லிகைப் பூவின் நறுமணம் கம்மென்று வீசப் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் புது மனைவி கௌரி யைப் பார்த்துக் கொண்டே இருந்த ஈசுவரனின் மனம் இறக்கை கட்டிக் கொண்டு வானத்தில் பறக்க ஆரம்பித்துவிட்டது. ஈசுவரன் மெதுவாகத் தம் வலது கையால் கௌரியின் இடது கையை அழுக்கினார். இருவருடைய தேகமும் புல்லரித்தது. "கௌரி!" என்று மெதுவாகக் கூப்பிட்டார். அதைக் கேட்ட கௌரியின் நெஞ்சும் மார்பும் படபட வென்று அடித்துக் கொண்டன.

"கல்லூரியில் படித்தவளாயிருந்தும் நீ இப்படிக் கர்நாடகமாய்க் குனிந்த தலை நிமிராமல் இருப்பா யென்று நான் நினைக்கவே இல்லை!" என்றார் ஈசுவரன்.

அப்பொழுது ஊர்வலம் கலியாண வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தது. "கௌரி! ஒரு வார்த்தை கூடப் பேச மாட்டாயா! ஊர் வலம் முடியும் சமயமாகி விட்டதே!" என்று கொஞ்சிய வண்ணம் கேட்டார் ஈசுவரன்.

கௌரிக்கு ஈசுவரனின் முகத்தைப் பார்க்கத் தைரியம் வரவில்லை. தன் கையை விடாமல் பிடித்திருந்த அவருடைய வலது கையையே உற்று நோக்கிக் கொண்டிருந்தவள் மணிக் கட்டுக்குமேல் பார்வை சென்றவுடன் திடுக்கிட்டு, "அது என்ன தழும்பு, உங்கள் கையில்! இவ்வளவு பெரிய தழும்பு உங்களுக்கு எப்போது ஏற்பட்டது!" என்று படபடவென்று வெட்கத்தை விட்டுக் கேட்க ஆரம்பித்து விட்டாள்.

ஈசுவரனின் முகம் கணப் பொழுதில் மாறி விட்டது. மந்தகாசமாயிருந்த முகம் சுருங்கியது. ஒருவாறு தம்மைச் சமாளித்துக் கொண்டு, "இதைத்தானா முதன் முதலில் நீ கேட்க வேண் டும்! இது வந்து...என் மாமனார்...இல்லை—என் மனைவி......இல்லை, இல்லை......இருவரும் சேர்ந்து அளித்த பரிசு!" என்றார் கேலிச் சிரிப்புடன்.

கௌரிக்கு வெட்க மெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய் விட்டது. "என்னது! மாம னாரா! மனைவியா! அப்படியானால் நானும், அப்பாவுமா! இல்லாவிட்டால் முன்பே......!" அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை.

"பதறாதே, கௌரி! பத்து வருஷத்துக்கு முன் உங்கள் வீட்டில் சமையல்காரி இருந்தாளே, அவள் பிள்ளை வைத்தியை உனக்கு ஞாபகமிருக் கிறதா!" என்று கேட்டார் ஈசுவரன்.

கௌரி தன் விழிகளை ஆச்சரியத்தால் படபட வென்று கொட்டியவாறு, "ஆமாம், அவர்களை உங்களுக்கு எப்படித் தெரியும்! அப்பாவும்



"காலும்......" என்று ஏதோ சொல்ல வந்தவள் சட்டென்று நிறுத்திக் கொண்டு அவர் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். உடனே நாக்குழற, "அப்படியானால் நீங்கள், நீங்கள்......!" என்றாள். அதற்கு மேல் பேச முடியாமல் அவள் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டு விட்டது.

அவள் பதற்றத்தைக் கண்டு கொண்ட ஈசுவரன், "ஆமாம், கௌரி! நான்தான் அந்த வைத்தி! இப்பொழுது டி. வி. ஈசுவரன், ஐ. ஏ. எஸ். புரிந்ததா!" என்றார். அதைத் தொடர்ந்தாற் போலவே, "ஏன் கௌரி! என்ன செய்கிறது! ஏன் அப்படிப் பார்க்கிறாய்! ஏன் விழிக்கிறாய்! கௌரி, கௌரி!" என்றார். அதற்குள் கௌரி மடேரென்று ஈசுவரனின் மேல் மூர்ச்சையாய் விழுந்து விட்டாள். ஈசுவரன் தம் மாமனாரை அருகில் அழைத்து "கௌரி களைப்பினால் மயக்கமாக இருக்கிறாள். காரைச் சீக்கிரமாக விடச் சொல்லுங்கள்!" என்றார். கௌரிக்கு மயக்கம் என்றதும் விசுவநாதனுக்குப் பகீரென்றது. காரில் பூமாலையும் கழுத்துமாகக் கௌரி ஈசுவரனின் மடிமேல் சாய்ந்திருக்கும் காட்சியைக் கண்ட அவர் இனம் தெரியாத வேதனைக் குள்ளானார். கௌரியின் தாயார் லக்ஷ்மி அழவே ஆரம்பித்துவிட்டாள். ஊர்வலம் கல்யாண வீட்டை ஐந்தே நிமிஷத்தில் அடைந்து விட்டது. கௌரியை ஈசுவரனும், விசுவநாதனுமாகத் தாங்கியபடி அழைத்துச் சென்று ஒரு அறையில் படுக்க வைத்தனர்.

கௌரி கண்ணைத் திறக்கச் சிறிது நேரம் பிடித்தது. அவள் கண்ணைத் திறந்தவுடன், "கௌரி! இந்தப் பாலைச் சாப்பிடு! உனக்கு என்னம்மா செய்தது! இப்போது எப்படி இருக்கிறது!" என்று தாயாரும் தகப்பனாரும் கேட்டார்கள்.

"ஒன்றுமில்லை. களைப்பாக இருந்தது. இப்பொழுது சரியாகப் போய் விட்டது" என்று லஜ்ஜையுடன் சொல்லியவாறு எழுந்து உட்கார்ந்தாள் கௌரி.

அதைப் பார்த்த ஈசுவரன் பரிவுடன் அவளைப் பார்த்து, "கௌரி! நீ இப்பொழுது எழுந்திருக்க வேண்டாம்! சற்றுக் கண்ணை மூடிக் கொண்டு படுத்து இளைப்பாறு!" என்று சொல்லி விட்டு மாமனாரைப் பார்த்து, "இனி கவலை ஒன்றுமில்லை. நீங்கள் வந்தவர்களைக் கவனிக்கப் போங்கள்!" என்றார். அவர் சொன்னதன் குறிப்பை யுணர்ந்து கொண்ட விசுவநாதன் தம்பதிகள் அவ்விடத்தை விட்டு அகன்றனர்.

கட்டிலில் சாய்ந்த கௌரியின் எண்ணங்கள் பத்து வருஷங்களுக்குப் பின்னால் சென்றன.

★

அப்பொழுது விசுவநாதன் வேலூரில் சர்க்கிள் இன்ஸ்பெக்டராக இருந்தார். அவர் தமது இருபத்து நாலாவது வயது முதலே போலீஸில் வேலை பார்த்து வந்ததால் அந்த இலாகாவுக்கே உரிதான முரட்டுச் சுபாவமும், முன் கோபமும், கல் நெஞ்சமும் அவரை ஆட் கொண்டிருந்தன. அவருடைய மனைவி லக்ஷ்மி கூட அவருடன் பேச யோசனை பண்ணுவாள். அவர் போக்கை யுணர்ந்து, சமயம் அறிந்துதான் பேசுவாள். அவரிடம் பயம் இல்லாமல் சுவாதீனமாகவும் சகஜமாகவும் பேசக் கூடியவள் அவருடைய அருமைப் புதல்வி கௌரி ஒருத்திதான். கௌரியை அவர் இஷ்டப்படி அருமையாக வளர்த்தார். அதனால் தகப்பனாரின் குணங்களில் பல, சின்னஞ் சிறு குழந்தையான அவளிடமும் பதிந்து விட்டன.

அவர்கள் வீட்டில் கௌரி பிறந்த நாளாகக் காமு என்பவள் சமையலுக்கு இருந்து கொண்டிருந்தாள். அவளுக்கு வைத்தி என்று ஒரே பிள்ளை. அவன் சென்னையில் அநாதைக் குழந்தைகள் படிக்கும் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான். அவனைப் படிக்கவைத்து முன்னுக்குக் கொண்டு வந்து விட்டால் தன் கஷ்டம் விடியும் என்று ஓடாக உழைத்து அவனுக்குத் துணி மணி வாங்கிக் கொடுத்துப் படிக்க வைத்துக் கொண்டிருந்தாள் காமு. வைத்திக்குப் பதினாறு வயது. எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷைக்கு ஆஜராகப் போகும் வருஷம். அரைப் பரீக்ஷை எழுதிவிட்டு ஒரு மாத லீவில் தாயாரிடம் வந்திருந்தான். தன் நிலைமையை நன்கு அறிந்திருந்த அவன் பிறர் வீட்டில் சோற்றுக்குப் பாரமாக இருக்கக் கூடாதென்று எண்ணி வந்தவர்களுக்குக் காப்பி கொண்டு கொடுப்பது போன்ற ஏவிய பணிகளைச் செய்து கொண்டிருந்தான். கௌரி அப்பொழுது ஆறாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். கணக்கு அவளுக்குச் சரியாக வராததால் வைத்தியை விட்டுக் கணக்கு சொல்லித் தர ஏற்பாடு செய்தாள் லக்ஷ்மி. வைத்தி மற்ற சமயங்களிலெல்லாம் ரொம்பவும் பணிவாகத் தன் நிலைமையை அறிந்து கொண்டு மரியாதையாய் இருந்த போதிலும் கௌரிக்கு வாத்தியார் பதவி வகித்துப் பாடம் சொல்லிக் கொடுக்கும் போது மட்டும் அவளிடம் சற்றுக் கண்டிப்பாகவே நடந்து கொண்டான். சிறு பையன்தானே! வாத்தியாரைப் போல் வாத்தியாராக இருக்க வேண்டுமென்று ஆசை. ஆனால் கௌரியின் குழந்தை சுபாவத்துக்கு அவனுடைய அந்தக் கண்டிப்பு கொஞ்சமேனும் பிடிக்கவில்லை. அவனை இது வரை ஒருவரும் அதட்டி வழக்கமில்லாததால் சதா

வைத்தியைப் பற்றித் தாயாரிடமும் தகப்பனாரிடமும் புகார் செய்த வண்ணமாய் இருந்தாள்.

காமுகூட இவற்றையெல்லாம் ஜாடைமாடையாய்க் கவனித்துப் பிள்ளையிடம் தனிமையில், "வைத்தி! பெரிய இடத்துப் பொல்லாப்பை உண்டாக்கிக் கொள்ளாதே! அவர்களால் உனக்கு எவ்வளவோ சகாயம் ஏற்படக் கூடும். நாம் அண்டிப் பிழைக்கும் மனிதரின் குழந்தையிடமும் மரியாதையாய் இருக்க வேண்டுமப்பா! பாடம் சொல்லிக் கொடுக்கும்போது நீ அதட்டுகிறதாக அந்தக் குழந்தை சொல்லிக் கொண்டிருந்தாள். நீ அவளிடம் மரியாதையாகவே நடந்து கொள்!" என்று புத்தி சொன்னான்.

இளங் கன்று பயமறியாது என்றபடி வைத்தி, "போ, அம்மா! உனக்கு ஒன்றும் தெரியாது. கௌரியின் நன்மைக்காகத்தானே நான் அவளை அதட்டிப் பாடம் சொல்லிக் கொடுக்கிறேன். அவள் நல்ல கெட்டிக்காரி. இவர்கள் வளர்க்கத் தெரியாமல் செல்லம் கொடுத்துக் கெடுக்கிறார்கள். நான் சொல்லிக் கொடுத்த பாடங்களில் அவள் இனி வரும் பரீக்ஷைகளில் எத்தனை மார்க்குகள் வாங்கப் போகிறாளென்று பார்!" என்று சொல்லி விட்டுப் போய் விட்டான்.

* * *

ஒரு நாள் காலையில் எட்டு மணி சுமாருக்குக் கௌரிக்கு வழக்கம் போல் வைத்தி பின்னக் கணக்குகள் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். அன்று தப்புத் தப்பாகக் கணக்குப் போட்டு வைத்தியின் பொறுமையைச் சோதித்துக் கொண்டிருந்தாள் கௌரி. அதோடு மட்டும் இல்லாமல் வைத்தி சொல்வதைச் சிறிதும் கவனிக்காமல் எதிரில் உள்ள அறையையே வேடிக்கை வேறு பார்த்துக் கொண்டிருந்தாள்.

எதிரில் உள்ள அறையில் விசுவநாதன் போலீஸ் உடுப்புகளை அணிந்து கொண்டு எங்கேயோ புறப்படுவதற்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். மேலதிகாரி சென்னையிலிருந்து வருவதாயிருந்ததால் வழக்கத்தைவிட மும்முரமாக உடுப்புகளை அணிந்து கொண்டு ரிவால்வருக்கு ரவைகளைப் போட்டுக் கொண்டார்.

வைத்தி அந்த அறைக்குப் பின்புறமாக உட்கார்ந்திருந்ததால் அங்கே யார் இருக்கிறார்கள், என்ன நடக்கிறது என்பது ஒன்றுமே அவனுக்குத் தெரியவில்லை.

'கௌரி, இங்கே பார்! வெறும் கூட்டலில் தப்புப் போட்டிருக்கிறாயே! வெட்கமாக இல்லை! நான் சொல்லச் சொல்ல எங்கேயோ வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாயே! நான் இப்போது உனக்கு வாத்தியாராக்கும். நீ இப்படிக் கவனிக்காமல் அடம் பண்ணினால் உன்னை நறுக்கென்று குட்டிவிடுவேன். ஜாக்கிரதை!" என்று சொல்லி விரல்களை மடக்கிக் குட்டும் பாவனையாகக் கௌரிக்குக் காண்பித்தான்.

அவ்வளவுதான். கௌரி பெண்புலியாகச் சீறினாள். "என்ன! என்னை நீ குட்டிவிடுவாயோ! அப்புறம் உன் மணிக்கட்டு உன் கையில் இல்லாமல் செய்ய எனக்குத் தெரியுமாக்கும். எங்கள் அப்பா போலீஸ் இன்ஸ்பெக்டர் என்பது நினைவிருக்கட்டும்!" என்று ஆவேசத்தோடு சொல்லி வைத்திக்கு அழகு காட்டினாள்.

வைத்தியும் சிறு பிள்ளைதானே! 'இந்தச் சின்னஞ் சிறு பெண்ணுக்கு இவ்வளவு அடுக்குத் தனமா!' என்று ஆத்திரப் பட்டான். "என்ன சொன்னாய்! நீ முட்டாள்தனமாகக் கணக்குப் போடலாம். பாடம் சொல்லித் தரும்போது அதைக் கவனிக்காமல் பராக்குப் பார்க்கலாம். நான் கண்டித்துக் குட்டினால் என் கையை ஒடித்து விடுவாயோ! அதையும்தான் பார்க்கலாமே," என்று ஆத்திரத்தில் தன் அறிவை இழந்து, தன் நிலைமை மறந்து மூக்கோபத்தில் கௌரியின் தலையில் குட்டியே விட்டான்.

வந்துவிட்டது அனர்த்தம்! கௌரிக்கு அவமானம் தாங்கவில்லை. வைத்தியைப் பழிக்குப் பழி வாங்கும் எண்ணத்தோடு அவன் தன்னைக் கொன்று விட்டாற்போல 'ஓ'வென்று பெரிதாக அழுது கொண்டே எதிரே தகப்பனார் இருந்த அறைக்கு ஓடினாள். "அப்பா! வைத்தி என்னை நறுக் நறுக்கென்று எத்தனை குட்டுகள் குட்டிவிட்டான், தெரியுமா! என் தலையெல்லாம் வலிக்கிறது!" என்று விசுவநாதனைக் கட்டிக் கொண்டு ஓலமிட்டழுதாள். கௌரியின் ஆர்ப்பாட்டத்தையும் எதிரே





டாக்டர் (வியாதியஸ்தரிடம்):— இந்த மருந்தைச் சாப்பிடுங்கள். நாளைக் காலையில் உங்களை வந்து பார்க்கிறேன்!

வியாதியஸ்தர்:— நீங்கள் வந்து என்னைப் பார்க்கலாம். ஆனால் நான் உங்களைப் பார்க்க முடியுமா, டாக்டர்?

விசுவநாதனையும் பார்த்தவுடன் வைத்திக்குக் கதி கலங்கிப்போய் அப்படியே சப்த நாடிகளும் ஒடுங்கி ஸ்தம்பித்துச் சிலையாய் நின்று விட்டான்.

மேலதிகாரியைப் பார்க்க வென்று போட்டுக் கொண்ட உடுப்புகள் கௌரி வந்து இறுகக் கட்டிக் கொண்டதால் மடிப்புக் கலைந்துவிட்டது. அந்தக் கோபமெல்லாம் வைத்தியின் மேலே பாய்ந்தது. "சமையற்காரியின் பிள்ளையான நீ என் பெண்ணைத் தொடுவதா! உன் கையை ஒடித்தாலென்ன! ஏண்டா அவளைக் குட்டினாய்!" என்று கர்ஜித்தார்.

வைத்தி நடுநடுங்கிப் போய், "இல்லே, மாமா!... வந்து... அவள் கணக்கைச் சரியாகப் போடவில்லை அதனால்...!" என்றான். அதற்கு மேல் அவனால் பேச முடியவில்லை.

"இனிமேல் குழந்தையைத் தொட்டாயோ, உன் கையை இந்தத் துப்பாக்கியினாலேயே சுட்டு விடுவேன். ஜாக்கிரதை!" என்று உறுமியபடி துப்பாக்கியை வைத்தியின் வலது கைக்கு எதிரே நீட்டியவாறு அவனை மிரட்டினார். ஒரு இமைப் பொழுதிற்குள் கௌரி சடக்கென்று பாய்ந்து துப்பாக்கியின் குதிரையை இழுத்து விட்டாள். 'டுமீல்' என்ற சத்தமும் 'அம்மா' வென்ற அலறலும் வீடே அதிர்ந்து போகும்படி கேட்டது. வைத்தி அப்படியே கீழே விழுந்து விட்டான்.

கௌரி அப்படிச் செய்வாளென்று விசுவநாதன் எதிர்பார்க்கவில்லை. எனவே, அவரே சற்றுத் திகைத்துப் போய் நின்று விட்டார். குண்டு கன்னுக் கையில் பாய்ந்து விட்டதென்பது மட்டும் அவருக்குத் தெரிந்து விட்டது. உள்ளேயிருந்து காமுவும் லக்ஷ்மியும் ஓடி வந்தார்கள். தன் பிள்ளையின் நிலைமையைப் பார்க்கச் சகிக்கவில்லை காமுவுக்கு. வைத்தியைத் தன் மடியில் போட்டுக் கொண்டு புலம்ப ஆரம்பித்து விட்டாள். லக்ஷ்மியோ பிரமை பிடித்தவள் மாதிரி நின்று விட்டாள். விசுவநாதனுக்கு காமிகையாகி விட்டதால் "இந்தா லக்ஷ்மி! கௌரி தெரியாமல் செய்து விட்டாள். உடனே நம் டாக்டருக்கு ஆள் அனுப்பி அழைத்து வரச் செய்து காண்பி. சரியாகப் போய் விடும்!" என்று சொல்லி விட்டுப் பதிலுக்குக் கூடக் காத்திராமல் 'டக், டக்' என்று பூட்ஸ் சப்தம் ஒலிக்க வெளியே சென்று விட்டார்.

* * *

வைத்தி வலியால் துடித்துக் கொண்டே, "அம்மா! இனி இந்த அகம்பாவம் பிடித்தவர்கள் வீட்டில் ஒரு நிமிஷம் கூட இருக்கக் கூடாது. தர்ம ஆஸ்பத்திரியில் வைத்தியம் பார்த்து நான் செத்துப் போனாலும் பரவாயில்லை" என்று பிடிவாதமாகச் சொல்லி விட்டான்.

லக்ஷ்மி எவ்வளவோ சமாதானம் சொல்லிக்கூட வைத்தி மறுத்துவிட்டு அந்த க்ஷணமே கிளம்ப வேண்டும் என்று சொல்லி விட்டான். எனவே லக்ஷ்மி ஆர்டர்லியை விட்டு ஒரு வண்டியைக் கொண்டுவரச் சொல்லிக் காமுவிடம் அவளுக்குச் சேரவேண்டிய சம்பளத்தைக் கொடுத்துப் பின்னும் தன்னிடமிருந்த பணத்தில் ஐம்பது ரூபாய் அதிகமாகக் கொடுத்தாள். "நீங்கள் ரொம்ப நாளாக என் வீட்டுக்கு உழைத்ததற்கு நான் கொடுக்கும் பிரதிபலன் இவ்வளவு விபரீதமாக இருக்குமென்று நான் நினைக்கவே இல்லை. வைத்தி வெகு கெட்டிக்காரன். அவனிடம் சொல்லி அவனை எவ்வளவோ முன்னுக்குக் கொண்டு வரவேணும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். வைத்திக்கு இங்கே இருக்க இஷ்டமில்லை. இவ்வளவு தூரம் அசம்பாவிதமான பிறகு நான் என்ன சொல்வது! அவனுக்கு ஆகும் வைத்தியச் செலவு முழுவதையும் நான் ஏற்றுக் கொள்கிறேன். தர்ம ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டாம்" என்று கண்களில் நீர் முட்டச் சொல்லி அவர்களுக்குப் பிரியா விடை கொடுத்து அனுப்பினாள்.

விசுவநாதன் வந்தவுடன் தாயாரும் பிள்ளையும் வீட்டை விட்டுப் போய் விட்டார்கள் என்பதை அறிந்து திடுக்கிட்டு விட்டார். பிறகு ஆஸ்பத்திரியில் விசாரித்ததில் அந்தப் பெயருடைய பையனையே 'அட்மிட்' செய்யவில்லை என்று சொல்லி விட்டார்கள்.

விசுவநாதனும் லக்ஷ்மியும் வைத்தி என்ன ஆனானோ என்று நினைப்பார்கள். கௌரிக்கு அந்தச் சம்பவமே பெரிய படிப்பினையாகி அவள் குணமே மாறிவிட்டது. கௌரியின் பிஞ்சு மனத்தில், தான் வைத்திக்குச் செய்த கொடுமை மறக்காமல் வேதனையை உண்டாக்கியது. பத்து வருஷங்கள் பத்து விநாடிகளாகப் பறந்தன. காலம் சென்றது. போகப் போக வைத்தியின் நினைவும் மங்கிக் கொண்டே வந்தது. விசுவநாதனின் குடும்பத்தினருக்கு. விசுவநாதனுக்கு மேலே மேலே உத்தியோகம் படிப்படியாய் உயர்ந்து திருச்சி ஜில்லா சூப்ரெண்டாக நியமனம் ஆயிற்று. கௌரியும் தனது பத்தொன்பதாவது வயதில் இண்டர் மீடியட் பாஸ் பண்ணிவிட்டு பி. ஏ. வகுப்பில் சேர்ந்தாள்.

கல்லூரிக்கென்று நிதி திரட்டுவதற்காகத் திருச்சியில் உள்ள பிரமுகர்கள் வீட்டிற்கெல்லாம் சென்றாள் கௌரி. சப்-கலெக்டர் சங்கரன் ஐ. ஏ. எஸ்.ஸைப் பார்த்துக் கல்லூரி நிதிக்கு உதவ வேண்டும் என்று கேட்டாள். சங்கரனும் கல்லூரி நிதிக்கு உதவியதோடு அவளை யாருடைய பெண் என்றெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்ட பின், "உங்கள் தகப்பனாரை ஒரு நாள் சந்திக்கிறேன்!" என்றார்.

கௌரி உடனே தன் தகப்பனாரிடம் வந்து, "அப்பா! இன்று நிதி வசூல் பண்ணுவதற்குச்

## ஒரு முறை பிரஷ் கொண்டு தேய்த்தால்
# கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் துர்நாற்றத்தை ஒழித்து
## வாயை சுத்தமாக்குகிறது




## இதோ! குளோரோபில்* டூத் பேஸ்டின் பூரண நன்மைகள் அடங்கிய புதிய, விசேஷ கால்கேட் சூத்திரம்!

குளோரோபிலின் நன்மைகளை பத்திரமான, ரஞ்சிதமான உருவில் தருகிறது கால்கேட் சூத்திரம்... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் துரிதமாக, திருத்தமாகச் செயலாற்றுகிறது... அது தரும் சுத்தம் மணிக் கணக்காக நீடிக்கும்!

புதிய, இனிய சுவாசம்...பலமான ஈறுகள் பெற...சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை உபயோகிக்கவும். சிறந்த பற்பசைகளைத் தயாரிக்கும் உலகிலேயே பெரிய ஸ்தாபனத்தின் உன்னத குளோரோபில் டூத் பேஸ்ட்.

**பாக்டீரியாவை ஒழிக்கிறது!**

எனுமலை அரிக்கும் தீய அமிலங்களையும்... அவற்றைத் தோற்றுவிக்கும் பாக்டீரியாவையும் குறைக்கிறது.

**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

குளோரோபிலின் நன்மைகளைப் பயன்படுத்தி, ஈறுகளைப் பலப்படுத்த கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் உதவுகிறது.




* நீரில் கரையும் குளோரோபிலின்கள் சேர்ந்தது

CTPA/G/2

## புதிய பச்சை டூத்பேஸ்ட் பரீட்சித்து உத்தரவாதம் அளிப்பது கால்கேட்

சப்-கலெக்டர் வீட்டுக்குச் சென்றிருந்தேன். அவர் வயதில் இளையவராகத்தான் இருக்கிறார். வீட்டில் ஸ்திரீகள் ஒருவரும் இல்லாததால் இன்னும் அவருக்குக் கலியாணம் ஆகவில்லை என்று தோன்றுகிறது. உங்களைக் கூடச் சந்திக்கிறேன் என்றார். அவர் ஐ. ஏ. எஸ். ஆபீஸர், அப்பா!" என்று மூச்சு விடாமல் சொன்னாள்.

"இவ்வளவு விவரம் கேட்டுத் தெரிந்து கொண்டதால் அவரையே வரன் பார்க்கிறாய்! இல்லையா, கௌரி? இன்றே அவரைப் பார்த்து முடித்து விடுகிறேன். அவ்வளவுதானே!" என்று பரிகாசமும் அன்பும் கலந்த தொனியில் கூறிவிட்டுச் சென்றார் விசுவநாதன். அவர் பேச்சளவில் சொன்னதோடு நிற்காமல் காரியத்திலும் வாஸ்தவமாகவே ஈசுவரனைப் பார்த்துப் பழகி அவரையே தமது மாப்பிள்ளையாகவும் ஆக்கிக் கொண்டார்.

★

இளம் பெண் கௌரிக்கு இவை யாவும் திரைப்படம் போல் ஒன்றன்பின் ஒன்றாக மனத்தில் தோன்றி மறைந்தன. தன் மன எழுச்சிகளை யெல்லாம் பெருமூச்சால் வெளிப்படுத்தினாள்.

அவளுடைய மனப் போராட்டத்தை அறிந்த ஈசுவரன், "கௌரி! நான்தான் வைத்தி என்றதும் என்னைப் பிடிக்கவில்லையா!" என்று கேட்டார்.

கௌரி உடனே ஈசுவரன் காலில் விழுந்து, "அப்படிச் சொல்லாதீர்கள்! நான் சிறு வயதில் அறியாத்தனத்தால் உங்களுக்கு இழைத்த கொடுமையை எண்ணி வருந்தாத நாள் கிடையாது. அதற்குப் பிராயச்சித்தமாக என் வாழ்நாள் முழுவதும் உங்களுக்குப் பணிவிடை செய்யும் பாக்கியம் எனக்குக் கிட்டிற்றே என்று ஆனந்தப்படுகிறேன்" என்று கூறி விம்மி விம்மி அழுதாள்.

"சீ அசடு! அழாதே!" என்று அவளை அணைத்தவாறு ஆறுதல் மொழிகளால் தேற்றினார் ஈசுவரன்.

கௌரி என்ன செய்கிறாள் என்று பார்க்க வந்த விசுவநாதன் தம்பதிகள், உள்ளே அவர்களிருவரும் பேசுவதைக் கேட்டவுடன் அறைக்கு வெளியிலேயே நின்று விட்டார்கள்.

"உங்கள் கை எப்படிச் சரியாயிற்று! உங்கள் அம்மா என்ன ஆனார்கள்! நீங்கள் எப்படி உன்னத பதவிக்கு வரமுடிந்தது!" என்று சரமாரியாகக் கேள்விகள் கேட்க ஆரம்பித்தாள் கௌரி.

"அப்பாடா! இப்போதுதான் என் உடம்பில் உயிர் வந்தது. வைத்தி என்று சொன்னால் உனக்கு என் மேல் வெறுப்பு ஏற்பட்டுவிடும் என்றே உன்னிடம் இதுவரை மறைத்து வந்தேன். என் வரலாறு முழுவதும் சொல்கிறேன், கேள். உங்கள் வீட்டிலிருந்து நேரே வேலூர் மிஷன் ஆஸ்பத்திரிக்குத் தான் போனேன். நான் இருக்குமிடத்தை உங்கள் வீட்டாருக்குச் சொல்ல இஷ்டமில்லாததால் யார் வந்து கேட்டாலும் இல்லையென்று சொல்ல ஏற்பாடு செய்தேன். கையில் குண்டு பாய்ந்து விட்டதால் மேஜர் ஆபரேஷன் செய்துதான் துப்பாக்கிக் குண்டை வெளியில் எடுத்தார்கள். ஒரு மாதம் ஆஸ்பத்திரியிலேயே இருந்தேன். உடம்பு குணமானதும் அம்மாவை அழைத்துக் கொண்டு சென்னைக்குப் போய் விட்டேன். அங்கே நான் படித்துக் கொண்டிருந்த அநாதை நிலையத்தின் சொந்தக்காரரிடம் கெஞ்சிக் கூத்தாடி அவர்கள் வீட்டிலேயே சமையலுக்கு அம்மாவை வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்தேன். அந்த வருஷம் நான் முதல் வகுப்பில் தேறியதால் கல்லூரியில் இலவச சம்பள வசதி எனக்குச் செய்து கொடுத்தார்கள். எம். ஏ. வரை இலவசமாகவே படித்து முதல் வகுப்பில் தேறினேன். பிறகு அங்கேயே ஒரு வாத்தியார் வேலைக்கு அமர்ந்து அம்மாவை இனியாவது காப்பாற்ற வேண்டும், கஷ்டப்பட விடக்கூடாது என்று எண்ணித் தனியாக ஒரு அறை வாடகைக்கு எடுத்துக் கொண்டேன்.

"நான் அந்த வாத்தியார் வேலை பார்ப்பதைப் பார்த்தே அம்மா பூரித்துப் போனாள். அப்படியே ஐ. ஏ. எஸ். ஸுக்கும் படித்துக் கொண்டிருந்தேன். நான் ஐ.ஏ.எஸ். பரீக்ஷை எழுதி முடித்ததும் மூன்று நாள் அம்மா ஜுரமென்று படுத்தவள் அப்புறம் எழுந்திருக்கவில்லை. தன் ஆயுள் முழுவதும் எனக்காக ஓடாக உழைத்து எவ்வளவோ பாடுபட்டாள். நான் நல்ல நிலைமைக்கு வரும் சமயத்தில் அவளை நன்றாக வைத்துக் கொள்ள நான் கொடுத்து வைக்கவில்லை!" என்று சொல்லி நிறுத்தினார். தாயாரின் நினைவு அவரை வேதனைக் குள்ளாக்கியது. சிறிது நேர மௌனத்துக்குப் பின், "பிறகு ஐ. ஏ. எஸ். பரீக்ஷையிலும் முதலாவதாகத் தேறினேன். சப்-கலெக்டர் வேலையும் ஆயிற்று. என் பெயர் வைத்தீசுவரன் அல்லவா! அதைத் தான் டி. வி. ஈசுவரன் என்று வைத்துக் கொண்டேன். இந்த ஊர்க் கல்லூரிக்காக நிதி வசூல் செய்ய நீ வந்தபோது உன்னை எங்கோ பார்த்த மாதிரி தோன்றியது. உன் அப்பா யார் என்று கேட்ட பிறகு நான் புரிந்து கொண்டேன். நான் மறந்தாலும் என் கையிலுள்ள மூன்று அங்குலத் தழும்பு மறக்காதே! பிறகு உன் தகப்பனாரே வலுவில் என்னை வந்து பார்த்து ஜாதகம் கேட்டார். 'ஜாதகமே இல்லை' என்றேன். 'சரி, மனப் பொருத்தம் போதும்' என்றார். நான் யார் என்பதைச் சொல்லி விடலாமா என்று பலமுறை யோசித்தேன். பிறகு, 'உனக்கு என்னைக் கல்யாணம் செய்துகொள்ள இஷ்டம் இருக்கிறது போல் இருக்கிறது. வலுவில் வரும் ஸ்ரீதேவியான உன்னை வேண்டாமென்று சொல்வானேன்!' என்று வாளாவிருந்து விட்டேன். நீங்கள் ஒருவரும் என்னைப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. இன்று ஊர்வலத்தின்போது உன்னோடு ஆசையாக முதன் முதலில் பேச வேண்டுமென்று நினைத்தேன். நீ என் கைத்தழும்பைப் பார்த்துக் கேட்டவுடன் சொல்லி விட்டேன். உன் அப்பா அம்மாவுக்குச் சொல்ல வேண்டாம். நான் யார் என்று தெரிந்தால் அவர் ஒருவேளை மட்டற்ற வெறுப்படைவார்!" என்று சொல்லி முடித்தார்.

"அப்பா, வைத்தி! இல்லை, தவறுதலாக வந்து விட்டது. ஈசுவரன், எனக்கு வெறுப்பே இல்லை. உன் கையில் துப்பாக்கி வெடித்ததிலிருந்து என் மனமும் குணமும் மாறி விட்டன. கௌரி தானாக அறியாத்தனத்தால் துப்பாக்கியை இழுத்துக் காயத்தை உண்டுபண்ணினாள். பிறகு அவள் தானாகவே வரன் பார்த்து வந்தாள். கடைசியில் அவளாலேயே ஈசுவரன் யார் என்று தெரிந்தது. எந்தக் கல்யாணத்திற்கும் முதலில் கௌரி கல்யாணம் தானே பாடவேண்டும்! இது கௌரியின் கல்யாணமல்லவா!" என்று கூறிக் கொண்டே அறைக்குள் நுழைந்தார் விசுவநாதன்.

ஈசுவரனும், "ஆமாம்! நீங்கள் சொல்வதுபோல் கௌரி தன்னுடைய கல்யாணத்தைத்தானே முன்னின்று நடத்திக் கொண்டாள்!" என்று சொல்லிச் சிரித்தார். கௌரியின் முகம் நாணத்தால் ரோஜா மாதிரிச் சிவந்து மலர்ந்தது.



ரமண்லால் வஸந்தலால் தேசாய் :: மொழி பெயர்ப்பு : ரா. வீ.

## 27. பாவம், அபலைகள்!

மனோரமாவின் அந்தப் பதிலைக் கேட்டு லக்ஷ்மி திருப்தி அடைய விரும்பவில்லை. எப்படியும் மனோரமாவினுடைய உள்ளத்தை அறிந்து கொண்டுவிட வேண்டும் என்றுதான் அவன் எண்ணினாள். எனவே, "தோழிகளின் கடிதங்கள் என்று எப்படி அம்மா தெரிந்தது?" என்று கேட்டாள்.

"விலாசத்தில் உள்ள கையெழுத்துக்களைப் பார்த்ததிலிருந்து!" என்று சர்வ சாதாரணமாகப் பதில் சொன்னாள் மனோரமா.

"அம்மா! நானும்தான் தினம் பார்க்கிறேன். கடிதங்களைப் பார்க்கப் பறக்கிறீர்கள்; துடிக்கிறீர்கள். 'தபால்!' என்ற சப்தத்தைக் கேட்டால் துணுக்குறுகிறீர்கள். ஆனால் கைக்குக் கடிதங்கள் வந்து விட்டால் நீங்கள் படிப்பதே இல்லை. பேசாமலே போட்டு விடுகிறீர்கள்! ஏன் அம்மா இப்படிச் செய்கிறீர்கள்?" என்று கேட்டாள் லக்ஷ்மி இதமும் இனிமையும் நிறைந்தகுரலில்.

"என் இஷ்டம். இதெல்லாம் உனக்கு என்ன கேள்வி?" என்று கடிந்து கொண்டாள் மனோரமா.

"என்ன அம்மா, இது? என்னை இப்படி எடுத்தெறிந்து பேசுகிறீர்களே! எப்பொழுது பார்த்தாலும் உங்கள் முகம் வாட்ட முற்றே இருக்கிறது நீங்கள் இப்படி எப்பொழுதும் வாட்டமாயிருக்கிறதைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை, அம்மா! என்னை வேறாக நினைக்காதீர்கள்! உங்களுக்கு வேண்டியவள் என்றே எண்ணுங்கள். உங்கள் மனதிலே இருக்கிற கஷ்டத்தைச் சொல்லுங்கள். அதைப் போக்க என்னால் ஆனதை நான் செய்கிறேன்" என்று மனோரமாவுக்கு மிகவும் வேண்டியவள் போல் லக்ஷ்மி பேசினாள்.

"அயலார்கள் எப்பொழுதாவது தன்னவர்களாக ஆவார்களா?" என்றாள் மனோரமா.

"அப்படியானால் என்னிடம் ஏன் அம்மா ஒளிவு மறைவு?" என்றாள் லக்ஷ்மி. எந்தக் காரியத்திலும் கைதேர்ந்த லக்ஷ்மிக்குப் பேசச் சொல்லியா கொடுக்க வேண்டும்? மனோரமாவின் சொல்லுக்கு என்ன உள்ளர்த்தம் என்பதை அவள் பொருட்படுத்தவில்லை. அந்த வார்த்தையிலும் தனக்குச் சாதகமான பொருளையே எடுத்துக் கொண்டு பேச்சைத் தொடர்ந்தாள். மனோரமா அவளுடைய அந்தக் கேள்விக்கு மறுமொழி சொல்லவில்லை. அதற்காக லக்ஷ்மி பேச்சை நிறுத்தி விடவில்லை. "ஏன் அம்மா! யாரிடமிருந்தாவது கடிதம் வந்து விடுமே என்று பயமாயிருக்கிறதா?" என்று கேட்டாள்.

மனோரமா அதற்கும் பதில் பேசவில்லை.

"சிறு பிராயத்தில் குழந்தைத் தனமாக எத்தனையோ பேச்சுக்கள் எத்தனையோ காரியங்கள் நடந்து விடுவது உண்டு. அந்தச் சமயத்தில் ஒன்றும் புரிபடுவதில்லை ஏதோ பேசி விடுகிறோம். ஆனால் இந்த ஆண் பிள்ளைகள் இருக்கிறார்களே, அந்தப் பேச்சை அப்படியே உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டு விடுகிறார்கள். அப்புறம் ஆளை விடுவதில்லை. வேறு ஒன்றும் இல்லா விட்டாலும் ஒரு கடிதமாவது எழுதி வைப்பார்கள். நீங்கள் எதற்கும் பயப்படாதீர்கள், அம்மா! இந்த வீட்டில் உங்கள் கடிதத்தை யாரும் கையால் கூடத் தொட மாட்டார்கள். இந்த வீட்டில் உள்ள யாருக்கும் அந்த மாதிரிக் கெட்ட பழக்கம் கிடையாது."— மனோரமா விழுங்கி விட்ட கராட்டோணுனைத் தெரிந்து கொண்டு விட்டவள் போல் லக்ஷ்மி வெகு நைச்சியமாகப் பேச்சைக் கொடுத்தாள்.

மனோரமாவுக்கு அவளுடைய அந்தப் பேச்சுப் பிடிக்கவில்லை. "எனக்கு ஒன்றும் யாரிடமும் எதற்கும் பயம் இல்லை. நீ பேசாமல் வாயைப் பொத்திக் கொண்டு போ, போதும்!" என்றாள் கடுமையாக.

"சரி, அம்மா! ஒருவர் கடிதம் எழுதினால் ஒருவர் படிக்கத்தானே வேண்டும்? இதில் பயப்படுவதற்கு என்ன இருக்கிறது?" என்று லக்ஷ்மி பேச்சை மாற்றி விட்டவள் போல-

ஆனால் அதே சமயத்தில் இரண்டு அர்த்தம் தொனிக்கப் பேசினான்.

மனோரமாவின் முகத்தில் நிரஸ்காரம் தெரிந்தது; ஏளனம் தொனித்தது. அவள் அவ்வளவு ஆதுரத்துடனும் ஆவலுடனும் கடிதத்தை எதிர்பார்ப்பதற்கு லக்ஷ்மி அத்தகைய உருவமா கொடுக்கிறாள்? தன்னை அவமதித்து மட்டம் தட்டுவதற்காகவா இத்தனை துடியாகத் தருணம் பார்த்துக் கொண்டிருக்கிறாள்? இதை நினைக்க நினைக்க மனோரமாவின் மனத்தை என்னவோ செய்தது. இருதயத்தை வேதனை பிழிந்தெடுத்தது.

ஆனால் லக்ஷ்மி கட்டிக் காட்டிய நீச் செயல்களுக்கும் நீய நோக்கங்களுக்கும் மனோரமா தன் மனத்தில் துளிக்கூட இடம் கொடுத்ததில்லை. குழந்தைப் பருவத்தில் அவள் விளையாட்டாக அப்படியொன்றும் செய்து விடவில்லை. லக்ஷ்மி கட்டிக் காட்டிய அந்தக் குழந்தைச் செய்கை அவளுடைய வாழ்க்கையைப் பொறுத்த வரை நடைபெறவே இல்லை. அவள் எந்த விஷயத்தையும் எந்தச் செயலையும் மூடி மறைத்து வைக்க வேண்டிய அவசியமே ஏற்பட்டதில்லை. யாருடைய கடிதம் வந்தாலும் அவள் பகிரங்கமாகச் சங்கோசமின்றி வாங்கிக் கொள்ளலாம், படிக்கலாம். யாருக்கும் பயந்து ஒளித்து மறைத்து வைக்க வேண்டிய தேவையே இல்லை.

ஆனால் லக்ஷ்மியோ மனோரமாவின் முக வாட்டத்திலும் மனத் துயரத்திலும் காம வாசனை புதைந்திருப்பதாகக் கனவு கண்டு கொண்டிருந்தாள். ஏனெனில் அவளுக்கு



வித்தைக்காரன் (ஜனக் கூட்டத்தில் நின்று கொண்டிருக்கும் தன் மகனைப் பார்த்து):— தம்பி, உனக்கு என்னைத் தெரியாதல்லவா?

பையன்:— தெரியாது!

வித்தைக்காரன்:— நிச்சயமாய்த் தெரியாதல்லவா?

பையன்:- நிச்சயமாய்த் தெரியாது, அப்பா!

உயர் நோக்கங்களுடன் தொடர்போ நெருங்கிப் பழகும் வாய்ப்போ கிட்டியிருந்தால் அல்லவா, அவள் அப்படி நினைக்காமல் இருப்பதற்கு? அவள் பழகிய சூழ்நிலை அத்தகையது. அவள் இருதயத்தில் தாழ்ந்த நோக்கம் இடம் பெற்றதற்கு அவள் வாழ்ந்து பழகிய சூழ்நிலையைச் சொல்ல வேண்டுமே ஒழிய அவளைச் சொல்லி என்ன பயன்? அற்ப புத்தியும் நீய எண்ணமும் கொண்ட மிக மிகச் சாதாரணப் பெண்ணான அவளுடைய மனத்தை எப்படி மாற்ற முடியும்? மனோரமாவுக்கு அவள் சொல்லைக் கேட்கச் சகிக்கவில்லை. கண்களில் கடுமையை வரவழைத்துக் கொண்டு லக்ஷ்மியை எரித்து விடுபவள் போல் ஒரு முறை பார்த்தாள். "நீ எண்ணுவது போல் ஒன்றும் நான் அத்தகையவள் அல்ல என்று சொல்லி விட்டால் என்ன?" என்று எண்ணினாள். ஆனால் நல்ல வேளையாக அவள் அந்த வாக்கியத்தை வாய் திறந்து சொல்லிவிடவில்லை. ஆயினும், அவளுடைய கண்கள் அந்த பாவத்தை அப்படியே வெளியிட்டு விட்டன.

லக்ஷ்மி அந்தப் பார்வையைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் தோய்ந்திருந்த பாவத்தை உணர்ந்தாள். தான் எண்ணியது போல மனோரமா ஒரு சாமான்யமான பெண் அல்ல என்பதையும் அப்பொழுதே மிகவும் நன்றாகப் புரிந்து கொண்டும் விட்டாள்.

ஆயினும் இந்த வாழ்க்கை இவ்வளவு விசித்திரங்கள் நிறைந்திருக்கக் காரணம் என்ன? ஜன்ம ஜன்மாந்தரங்களாக வாழையடி வாழையெனத் தொடர்ந்து வரும் தொந்தமாயிருக்குமோ? அல்லது கடந்த கால வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஏதாவது மனத்தை விட்டு அகலாதவாறு பதிந்து போயிருப்பதாயிருக்குமோ? அப்படியெல்லாம் ஒன்றும் இல்லையென்றால், மனோரமாவின் மனத்துக்கு மாதவப் பிரஸாதைப் பிடிக்காமற் போவானேன்? இதற்கெல்லாம் காரண காரியத்தை யார் ஆராய்ந்து கொண்டிருப்பது?

மாதவப் பிரஸாதின் உடல் அமைப்பைக் கொண்டு அவர் நாற்பது வயதைத் தாண்டியவர் என்று யாரும் சொல்லிவிட முடியாது. அவருடைய குணாதிசயங்களிலோ சுபாவங்களிலோ இம்மியளவு கூடக் குறை கூறுவதற்கும் இடம் இல்லை. அருவருப்பை அளிக்கக் கூடிய கெட்ட பழக்கங்கள் என்று அவரிடம் ஒன்றுகூடக் கிடையாது.

அவருடைய குழந்தைகளை மனோரமாவுக்கு மிகவும் பிடித்திருந்தது. அப்படியிருக்கும் பொழுது மாதவப் பிரஸாதை மட்டும் பிடிக்காமல் போவதற்கு அவளுடைய உடலில் அப்படியென்ன பேயோ பிசாசோ புகுந்து விட்டது? மனோரமாவுக்கு என்ன நேர்ந்து விட்டது? அவளுடைய புத்தி அப்படிப் போவானேன்? அவளுடைய மகிழ்ச்சியும் ஆனந்தமும் எங்கே சென்று விட்டன? சுகத்துக்கு வேண்டிய சாதனங்கள் கிடைத்த பிறகு மனிதன் மகிழ்ச்சி



# ஒரு பிரபு வகுப்பு மங்கை

அயோத்தியின் ராஜபுத்திர பரம்பரையைச் சேர்ந்தவர்களான 'பிரபு' எனும் வகுப்பினர் மொகுல் மன்னர் காலத்தில் தீரத்திலும் ராஜவிஸ்வாசத்திலும் தனிப்புகழ் பெற்று விளங்கினர். நாளடைவில் தேசகால மாறுபாடுகளினால் அவர்களது ஆண்மையும் போர் வீரமும் படிப்படியாக மங்கி இப்பொழுது அரசியல்துறையிலும், இலக்கியத்துறையிலும், சட்டத்துறையிலும், வைத்தியத்துறையிலும் அவர்கள் தமது முழுத் திறமையையும் காட்டி வருகின்றனர்.

பிரபு ஜாதிப் பெண்மணிகள் கவர்ச்சியான அங்கங்களும், தேர்த்தியான தோற்றமும், நாகரீகமான நடையுடை பாவனையுமுள்ளவர்கள் கபட மற்ற பேச்சும் மரியாதையான குணமும் உடையவர்கள். இவ்வாறு அவர்கள் குடும்ப வட்டாரத்திற்குள் கௌரவமும், மதிப்புமுள்ள ஒரு நிலையைப் பெற்று விளங்குகின்றனர். அவர்களுடைய ஊக்கம் வீட்டு விவகாரங்களிலும் தமது சொந்த முன்னேற்றத்திலுமே முடிந்து விடுகிறதோ என்றால்,—இல்லை பரந்த நோக்கத்தோடு, சமூக, தேசிய நடவடிக்கைகளிலும் அவர்கள் கவனம் செலுத்துவதுண்டு.

ஸால்ஸெட்டி தீவில் குடியேறியவர்களில் மிகப் பழமையானவர்கள் பிரபு ஜாதியினர்.

நாங்கள் இந்தியாவின்
மூலை முடுக்குகளிலு
ள்ள அநேகம் சமூகங்
களோடு உறவாடிக்
கொண்டிருக்கிறோம்.
அவர்கள் எங்களை
நம்பி இருக்கிறார்கள்,
நாங்களும் அவர்க
ளுக்கு பணி செய்வ
தில் பெருமை அடை
கிறோம்.

**பர்மா-ஷெல்... பாரத நாட்டின்**
**வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**

BSY-708B TAM

கொள்ள வேண்டியதுதானே இயல்பு? மனோரமாவும் மனுஷ்ய ஜன்மம் படைத்தவள் தானே? அப்படியிருக்கும் பொழுது அவளுடைய மகிழ்ச்சிக்கு இடையூறாக அப்படி என்ன பொருள் குறுக்கிட்டு விட்டது? அதுதான் யோசிக்க யோசிக்க அவளுக்குப் புரியாத பெரிய புதிராக இருந்தது.

லக்ஷ்மி அப்புறம் அங்கே நிற்கவில்லை. பேசாமல் அறையை விட்டு வெளியேறி விட்டாள். சாந்தா மனோரமாவுடன் விளையாடத் தொடங்கினாள். அவளும் சாந்தாவுடன் விளையாடலானாள். ஆனால் அவள் மனம் விளையாட்டில் செல்லவில்லை. "லக்ஷ்மியை அலட்சியப் படுத்திக் கடிந்து அனுப்பினோமே, அது நியாயம் தானா? 'நீ எண்ணுவது போல் நான் ஒன்றும் அந்த கையவள் அல்ல!' என்று சொல்ல நினைத்தோமே, அதில் உண்மை எவ்வளவு புதைந்திருக்கிறது?" என்பது போன்ற கேள்விகள் அடிக்கடி எழுந்து அவள் மனத்தை விளையாட்டில் செல்லவொட்டாமல் அடித்தன.

அவளுடைய கடந்த கால வாழ்க்கையில் அப்படியொன்றும் கவலைக்கிடமளிக்கக் கூடிய, பயப்படக் கூடிய சம்பவம் நிகழ்ந்து விடவில்லை என்பது உண்மைதான். ஆயினும் அவள் உள்ளத்தில் இடம் பற்றிக் கொண்டு விட்ட சுதாகர் அவ்வளவு நாட்களாகியும் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தான். அவள் நினைவை விட்டு அவன் விலகுவதாகவே தெரியவில்லை. இது விசித்திரமாயில்லையா? கல்லடி மங்கன் கதையாக இல்லையா? போகும் பொழுது அவன் கடிதம் எழுதுவதாக வாக்குறுதி அளித்துச் சென்றானே! இத்தனை நாட்களாகியும் அவன் ஒரு கடிதமாவது எழுதினானா? தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றத்தான் நினைத்தானா?

அவன் கொடுத்த வாக்குறுதியை நம்பி, மனோரமா எத்தனை நாட்கள் தான் இலவு காத்த கிளியாகக் காத்திருப்பாள்? சுதாகர் தன் வாக்குறுதியைக் காற்றில் பறக்க விட்டு விடவே, மனோரமாவும் அவனிடமிருந்து கடிதம் வரும் என்ற நம்பிக்கையை அடியோடு விட்டு விட்டாள். தன் எண்ணம் ஈடேறாமற் போகவே, தாய் தந்தையரின் மனத்துக்காவது மகிழ்ச்சியை அளிப்போமே என்று எண்ணி மாதவப் பிரஸாதுடன் மணம் கூடச் செய்து கொண்டு விட்டாள். அவள் அவசரப் பட்டு அந்த முடிவுக்கு வந்துவிட வில்லை. நன்றாக யோசனை செய்து பார்த்த பின்னர்தான் அந்த முடிவுக்கு வந்தாள். கடிதம் எழுதுவதாக வாக்களித்து விட்டுப் போன சுதாகர் கடிதம் எழுதாமல் அலட்சியமாயிருந்து விட்டான். அவளுடைய தோழி சம்பா வேறு அவனைப் பற்றிக் காதுக் கொண்டு கேட்க முடியாத அவதூறான செய்திகளைச் சொல்லி மனத்தை முறித்து விட்டாள். இரண்டுமாகச் சேர்ந்து கொண்டு மாதவப்



"உங்கள் வரிகளைச் செலுத்தும்போது கஷ்டப் படக் கூடாது. புன்சிரிப்போடு செலுத்த வேண்டும்!"

"அது சரிதான், ஸார்! அவர்கள் புன்சிரிப்பைக் கேட்டால் பாதக மில்லையே! வரியைப் பணமாக அல்லவோ செலுத்தச் சொல்லுகிறீர்கள்!"

பிரஸாதை மணந்து கொள்ளும்படியான முடிவுக்கு அவளை வரச் செய்து விட்டன.

அது சாதாரணச் சூழ்நிலையோ, அசாதாரணச் சூழ்நிலையோ அவள் மாதவப் பிரஸாதை மணந்து கொண்டு விட்டாள். அப்படியிருக்கும்பொழுது அவரைத் திருப்திப் படுத்துவதுதானே அவளுடைய கடமையாக இருக்க வேண்டும்?

மாதவப் பிரஸாத் தம் கடமையை எவ்விதக் குறைவுமின்றி நிறைவேற்றி வந்தார். மனோரமாவை எவ்விதத்திலும் மகிழ்ச்சி கொள்ளச் செய்வதையே தம் குறிக்கோளாகக் கொண்டு அதற்கான காரியங்களையே அவர் செய்து வந்தார்.

இவ்வளவு தூரம் அவர் செய்து வரும்போது அவள் சுதாகரின் நினைவாகவே இருக்கலாமா? அவனிடமிருந்து கடிதம் வரும் என்று எதிர் பார்த்து உட்கார்ந்திருக்கலாமா? கடிதம் வந்து விட்டால் என்ன செய்வது என்ற பீதியில் துணுக்குற்றுத் தவிக்கலாமா? கடிதம் வராவிட்டால், கடிதம் வரவில்லையே என்று நம்பிக்கை இழந்து ஏமாற்றக் கடலில் மூழ்கித் தத்தளிக்கலாமா?

இதுபோன்ற தர்ம சங்கடமான சிந்தனைகளில் லயித்துத் தன் வாழ்க்கையையும் பிறர் வாழ்க்கையையும் துயரக் கடலாகச் செய்து கொள்வது மனோரமாவுக்கு உகந்த செய்கையா? மனைவி கணவனுக்குச் செய்ய வேண்டிய கடமை இதுதானா? மனோரமா மனைவியின் கடமையைச் சரி வரச் செய்கிறாள் என்று சொல்ல முடியுமா? இதையெல்லாம் பார்த்தால் அவள் மனைவி என்ற ஸ்தானத்துக்குத் தகுதி வாய்ந்தவள் என்று எப்படிச் சொல்வது?

இம்மாதிரிச் சிந்தனைகள் மனோரமாவின் மனத்திலே எழுந்தன. அவள் லக்ஷ்மியை விட மேலானவளா? மேலானவள் என்றால் எந்த விதத்தில் மேலானவள்? மனோரமா சிக்கறுக்க முடியாத சிந்தனையில் சிக்கினாள்.



புதிதாக விவாகமானவரின் மனைவி:— ஆமாம்! அடுப்பைச் சரியாகப் பற்ற வைக்கக் கூடத் தெரியாத என்னை, எல்லோரிடமும் 'சமையல் செய்வதில் தேர்ந்தவள் என்பதனால் தான் நான் இவளைக் கல்யாணம் செய்து கொண்டேன்' என்று சொல்லி வருகிறீர்களே?

கணவன்:— அவர்களுக்கு ஏதாவது சால்ஜாப்பு சொல்ல வேண்டுமல்லவா?

கணவனைத் தவிர வேறு எந்தப் பிற புருஷனிடத்தில் ஆசை கொண்டாலும், இருதயத்தில் மோகத்துக்கும் மயக்கத்துக்கும் இடம் கொடுத்தாலும் அது பாவம் அல்லவா? சுதாகரை இருதயத்திலிருந்து அகற்ற முடியாத அவள் பாவம் தீண்டாதவளா? அவளைப் பாவி இல்லை என்று எப்படித் திட்டமாகச் சொல்ல முடியும்?

ஆனால் ... ! அதற்கு என்ன வழி? சுதாகருடைய நினைவையே இருதயத்தில் வர வொட்டாமல் செய்ய வேண்டும். அது அவளால் முடிந்த காரியமா?

தினசரி பூஜையின் நினைவு அவளுடைய இருதயத்திலே அசைக்க முடியாதபடி வேரூன்றி விட்டது. அவள் பக்தி சிரத்தையுடன் பூஜை செய்து கொண்டிருந்த நேரத்தில்தானே சுதாகர் அவளுடைய உள்ளத்தில் இடம் பற்றினான்? இடம் பற்றினவன் அவளுக்குக் கடிதம் எழுதுவதாக வாக்குறுதி அளித்து அவள் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளச் செய்து, தன் நினைவாகவே இருக்கும்படி செய்து விட்டானே! அப்படி இருக்கும் பொழுது அவள் அவனை எப்படி மறக்க முடியும்? தூங்கும் பொழுதும் அவளுக்கு அவன் நினைவுதான்; விழித்துக் கொண்டிருக்கும் பொழுதும் அவன் நினைவுதான். தூக்கத்தில் அவன் கனவு. விழிப்பில் அவன் நினைவு: அவனிடமிருந்து கடிதம் வரும் என்ற ஆசை. அதனால் அவள் மனம் அவள் வசத்திலேயே இருப்பதில்லை. அவள் இருதயத் திரையில் சுதாகரின் உருவம் அழியாச் சித்திரமாகக் காட்சி அளிக்கத் தொடங்கி விட்டது. அவனுடைய உருவத்தையும் நினைவையும் அகற்ற அவள் எடுத்துக் கொள்ளும் அத்தனை முயற்சிகளும் பலிதமாவதில்லை.

கனவைத் தடுக்க அவளுக்கு வழியே புலப்படவில்லை. ஆனால் தபால்காரன் வரும் பொழுது அவள் தன் பரபரப்பை அடக்கிக் கொள்ள ரொம்பப் பிரயாசைப் படுவாள். அதிலும் அவளுக்கு வெற்றி கிட்டுவதில்லை. மனத்தின் பரபரப்பை அடக்க அவள் முயற்சிக்க முயற்சிக்க அது இன்னும் அதிகமாகி வந்தது.

"நாம் மாதவப் பிரஸாதுடன் கல்யாணம் செய்து கொண்டோமே, அது உண்மையான கல்யாணம் ஆகுமா?"—அவள் மனத்தில் இந்தக் கேள்வி எழுந்தது.

சமூகம் திருமணத்தின் மீது தர்மத்தின் முத்திரையை அச்சிட்டுத்தான் செலாவணியாக்குகிறது. அதாவது திருமணம் தர்மச் சடங்காகக் கருதப்பட்டு வரன் முறைகளுடன் நடத்தப் படுகிறது. திருமணம் செய்து கொள்ளாமல் ஆணும் - பெண்ணும் பூணும் உறவு அநீதியானதாகவும் அசுத்தமானதாகவும் தீயதாகவும் கருதப் படுகிறது. சிறுவன் சிறுமி எல்லோரும் இந்த கலாசாரத்தின் அடிப்படையில் தான் வளர்கிறார்கள். எனவே, திருமணங்கள் அநீதி வாய்ந்ததாகவும் இருக்கக் கூடும் என்பதை ஜனங்கள் நம்பவே மாட்டேன் என்கிறார்கள். ஏன்? கற்பனை கூடச் செய்து பார்க்க மாட்டோம் என்கிறார்கள்.

ஆனால் மனோரமாவின் மனத்தில் திருமணங்கள் நேர்மை தவறியும் நடக்கக் கூடும் என்ற எண்ணம் எழுந்தது. ஏன் அதைக் காட்டிலும் பல படி மேலான, படு பயங்கரமான எண்ணமும் எழுந்தது.

"இது போன்ற கல்யாணக் கட்டுப்பாடுகளைத் தகர்த்தெறிந்து விட்டால் என்ன?" என்று எண்ணினாள் அவள்.

அந்த எண்ணம் அடுத்த வினாடியே பயங்கரப் பேயுருவமாக விசால ரூபம் எடுத்து விட்டது. அவள் அப்படியே நடு நடுங்கி வெலவெலத்துப் போய் விட்டாள்.

விவாக ரத்தா? குலத்தைக் கெடுக்கும் பயங்கரப் பேய் எண்ணமா? இம்மாதிரி எண்ணத்தின் நிழல்கூட உயர் குடும்பங்களில் படக் கூடாதே! ஐயோ!

மனோரமா காதுகளைப் பொத்திக் கொண்டாள்; கண்களைப் பொத்திக் கொண்டாள். அவள் பேய் அறைந்தவள் போல் பிரமை பிடித்துத் திகிலே உருவாகி விட்டாள்.

"நாமே இறந்து விட்டால் எவ்வளவு நன்றாய் இருக்கும்?" என்றது அவள் மனம்.

இம்மாதிரி மனத்துக்குப் பிடிக்காத பலனற்ற திருமண வாழ்க்கையின் காரணமாக ஆண்கள் சாக நினைப்பதில்லை. ஆனால் பெண்கள் ஒன்று சாக வேண்டும் அல்லது அந்தப் பிடிக்காத விவாகத்துக்கு ஈடு கொடுத்தாக வேண்டும். இவ்விரண்டை விட்டால் அவர்களுக்கு வேறு வழி கிடையாது.

பாவம், அபலைகள்! அவர்கள் வேறு என்ன செய்வார்கள்? (தொடரும்)



# எவ்வளவு அழகாக அமைந்திருக்கிறது



பின்னியின் அசல் பங்களூர் சில்க் சாரி அணிந்து கொண்டிருக்கும் நீங்கள் சிறந்ததையே தேர்ந்து வாங்கு வதில் உங்களுக்கு இருக்கும் திற மைக்கு அத்தாட்சி. அழகான பங் களூர் சில்க், பாடிஸ்களுக்கு இணங்க நிறமையுடன் மடிப்புகள் போட்டு அணிந்துகொள்ள இன்றி யமையாதது.

பின்னியின் விதவிதமான கலர்களை பாருங்கள். தங்க பார்டர்கள், பல்வகை போட்ட ''காண்ட்ராஸ்ட்'' சில்க் சாரி கள் உங்களுக்கு பிடித்தமான 'ஸ்டைல்' களில் இருக்கிறதை கவனியுங்கள்.

நீங்கள் ப்ரயாணம் செய்யும்பொழுது ஒரு பின்னி பெங்களூர் சில்க் சாரி எடுத் துக்கொள்ள மறந்து விடாதீர்கள். இஸ் திரி செய்ய வேண்டுமே என்ற கவலை இல்லை. புதுமையுடனும் உடுத்திக் கொள்ள தயாராகவும் அது அமைகிறது.

பின்னி 

எல்லா அசல் பின்னி சாரிகளிலும் தங்க நிறத்திலுள்ள இந்த மார்க் போட்டிருக்கிறது.

## பங்களூர் சாரிகள்

பங்களூர் வுல்லன் காட்டன் அண்டு சில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட், பங்களூர் 2

ஏஜண்டு, செகரட்டரி. மற்றும் ட்ரஷரர்கள்:— பின்னி அண்டு கம்பெனி, (மதராஸ்) லிமிடெட்

இன்டென்டர்ஸ்: H.A.R. மூகம்மத் கோட் அண்டு ஸன்ஸ், திவான் சரப்பாலர் வெயின், பங்களூர் ஸிடி.

ஹாஜி இப்ராஹிம் இஸ்மைல் அண்டு ஸன்ஸ், சிக்பேட், பங்களூர் ஸிடி.

H. A. R. மூகம்மது அண்டு ஸன்ஸ், ந. 6, கோடௌன் ஸ்ட்ரீட், மதராஸ்.

ராமநாராயண சிந்தாமணி அண்டு கம்பெனி, திவான் சரப்பால் வெயின், சிக்பேட், பங்களூர் ஸிடி.

தி மதராஸ் மில்ஸ் டிபோஸ் கம்பெனி, சாண்டேர்ஸ் ரோட், செகந்தராபாத்.

# நீங்கள் இன்று
# புரோடெக்ஸ்
# உபயோகித்தீர்களா?

நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும் வாசனையுடனும் இருக்க, உயர்ந்த, புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட் பவுடர். மென்மையும், நறுமணமும் சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும் வெப்பத்தில் குளுமையும் இனிமையும் தருகிறது.



ஸ்நானத்துக்குப் பின் வாசனைப் பூஷணம். ஈரத்தை உறிஞ்சி புதுமை தருகிறது.



குளுமை! குதூகலம்! கோடையின் கொடுமையில்



நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.



மிக எடுப்பானது உங்கள் வதனத்தை அழகு படுத்தும் பவுடர்.




# புரோடெக்ஸ்
# ஆல் பர்பஸ்
# டாய்லட் பவுடர்

# சேலம் வீரரின் தீரப் போராட்டம்

ஆர். டி. பார்த்தசாரதி, எம். ஏ., பி. எல்.

இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்பு தேசத்தின் பல பாகங்களிலும் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கு மிடையே சச்சரவுகள் தோன்றிக் கொண்டே யிருந்தன. அதன் விளைவாகப் பல இடங்களில் உயிர்ச் சேதமும் பொருள் சேதமும் ஏற்பட்டன. நல்ல எண்ணங் கொண்ட மக்களும் கூட மத வெறி பிடித்தோரின் கொடுமைக்கு ஆளாகி வருந்தினர். பெண்கள் அவமானப் படுத்தப் பட்டனர். சிறிய குழந்தைகளும் இவ்வெறிக்குப் பலியாயினர். கிராமங்கள் சூறையாடப் பட்டன. வீடுகள் எரிக்கப் பட்டன. நாட்டில் அரசாட்சி புரிந்து வந்த பிரிட்டிஷாரால்கூட இக்கலவரங்களைத் தடுக்க முடியாமற் போயிற்று.

1882-ம் வருஷத்தில் சேலத்தில் இம்மாதிரியான ஒரு பெரிய கலவரம் ஏற்பட்டது. முதலில் சிறியதாகத் தோன்றிய இக்கலவரம் வலுத்து அதிகாரிகளால் அடக்க முடியாமல் போயிற்று. சேலத்தின் ஒரு பகுதியிலுள்ள செவ்வாய்ப் பேட்டையில் ஒரு புதிய மசூதி கட்டப் பட்டிருந்தது. அவ்வழியாக இந்துக்கள் ஊர்வலம் நடத்துவதையும், மேளம் வாசிப்பதையும் முஸ்லிம்கள் ஆட்சேபித்தார்கள். ஆனால் இந்துக்கள் வழக்குத் தொடர்ந்து சென்னை உயர்தர நீதி மன்றம் வரையில் சென்று தங்கள் உரிமைகளை ஸ்தாபித்துக் கொண்டார்கள்.

ஊர்வலத்தையோ மேளம் வாசிப்பதையோ தடுக்க முஸ்லிம்களுக்கு உரிமை யில்லை என்று ஹைகோர்ட் தீர்ப்புக் கூறிய பிறகும் கூட முஸ்லிம்கள், ஹிந்துக்கள் ஊர்வலம் நடத்திச் செல்வதைத் தடுத்தார்கள். இதன் விளைவாக இரு சமூகங்களுக்கு மிடையே தொடங்கிய கலவரம் அதிகாரிகளால் ஏதும் செய்ய இயலாதபடி வலுத்தது. புதியதாகக் கட்டப் பட்டிருந்த மசூதி தரைமட்டமாக்கப் பட்டது. எரியும் வீடுகளில் மக்கள் வீசி எறியப் பட்டனர். தெருக்கள் ஜன நடமாட்டமின்றிச் சூன்யமாகக் காணப் பட்டன. ஜனங்கள் வீடுகளில் அடைபட்டு வெளியில் தலைகாட்டவும் பயப்பட்டனர். மூன்று நாட்கள் வரையில் அங்கங்கே பிரிட்டிஷ் ஆட்சியே மறைந்து விட்டது. கடைசியாக, சென்னையி லிருந்தும் பெங்களூரி லிருந்தும் பிரத்யேகத் துருப்புகள் வரவழைக்கப் பட்டு இப் பெரிய கலவரத்தை ஒருவாறு சமாளித்து அடக்கினார்கள்.

*　　　*　　　*

ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் அவர்கள் சேலத்தில் வக்கீல் தொழிலை ஏற்று அப்போது இரண்டு வருஷங்கள்தான் ஆகி யிருந்தன. இதற்குள்ளாகவே அவரது திறமையையும் தைரியத்தையும் மக்கள் நன்கு உணர்ந்திருந்தனர். அந்தக்கலவரத்தில் சம்பந்தப்பட்டு விசாரணைக்குக் கொண்டு வரப் பட்ட பல ஹிந்துக்கள் அவரைத் தங்கள் சார்பில் வாதிப்பதற்காக அமர்த்தினார்கள்.

அவர்களின் வழக்குகளை இளம் வக்கீல் திறமையுடன் வாதித்தார். இவருடைய வாதத்தை அதிகார வர்க்கத்தினர் தவறாக எடுத்துக் கொண்டு, இவரை அக்கலவரத்திற்குக் காரணமாக இருந்தவர்களில் முக்கியஸ்தராகக் கருதினார்கள். கலவரத்தினால் ஏற்



ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார்

பட்ட பல வழக்குகளில் இவரையும் ஒரு குற்றவாளியாகச் சேர்த்து விட்டார்கள்.

தரைமட்டமாக்கப் பட்ட பகுதியின் அழிவிற்கு இவர்தான் முக்கிய காரணகர்த்தா என ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் மீது வழக்குத் தொடரப் பட்டது. அப்பொழுது சேலத்தில் பிரத்யேக செஷன்ஸ் நீதிபதியாக நியமிக்கப் பட்டிருந்த எச். விக்ரேம் என்பவரின் முன்பாக மேற்படி வழக்கு தொடரப் பட்டது. நீதிபதி அவருக்கும் இன்னும் சிலருக்கும் பத்து வருடம் தீவாந்திர சிறைத் தண்டனை விதித்தார்.

சிறைவாசம் என்பது அக் காலத்தில் சாமான்யமான விஷயமல்ல. மிகவும் பயங்கர



## உடற்பயிற்சி விழா

திருவல்லிக்கேணி தமிழர் இளைஞர் முன்னணியைச் சேர்ந்தவர்கள் சென்ற நவம்பர் 13உ மாலை நவஜோதி மண்டபத்தில் பல அரிய உடற் பயிற்சி முறைகளைச் செய்தார்கள். கழி விளையாட்டு, தீவர்த்தி சுற்றுதல், கோபுரம் அமைத்தல் முதலியவை மிகச் சிறப்பாக இருந்தன. இவ்வைபவத்துக்குத் தலைமை வகித்த ஸ்தல ஸ்தாபன மந்திரி ஸ்ரீ கே. ராஜாராம் அவர்கள் உடற் பயிற்சி செய்து காட்டிய இளைஞர்களைப் பாராட்டினர்.

---

மான தண்டனையாகும். சிறைவாசம் ஒருவரின் வாழ்க்கைக்கு முட்டுக் கட்டையாகவும், சமூகத்தில் அவருக்கு எவ்வித இடமும் கொடுக்காத ஒரு கடும் சோதனையாகவும் நினைக்கப்பட்டு வந்த காலம் அது.

நியாய ஸ்தலத்தில் விஜயராகவாச்சாரியாருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் தீர்ப்பளித்த நிகழ்ச்சிகளைப் பத்திரிகைகள் விரிவாய்ப் பிரசுரித்தன. அப்பொழுது சென்னையில் முக்கியத்துவம் வாய்ந்து விளங்கிய 'மதராஸ் ஸ்டாண்டர்ட்' பத்திரிகையின் நிருபர் அதைப்பற்றி எழுதியதாவது:

"மாலை மூன்று மணிக்குச் சேலம் விஜயராகவாச்சாரிக்கும், அவருடன் இருந்த மற்றப் பத்து பேருக்கும் தீவாந்திர சிட்சை விதிக்கப் பட்டது. அவர்கள் அனைவரும் பொலிவிழந்து கவலை தோய்ந்த முகத்துடன் காணப்பட்டனர். நான் இந்தப் பதின்மூன்று வருஷமாக நடந்து வந்த வழக்குகளில் தீர்ப்புக் கூறப்பட்ட பல குற்றவாளிகளையும் பார்த்திருக்கிறேன். மரண தண்டனை விதிக்கப் பட்டோரை, அவர்கள் தூக்கிலிடப் படுவதற்கு முன்பும் பார்த்திருக்கிறேன். ஆனால், தன் எதிர்கால வாழ்க்கை பாழாகி விட்டதே என்ற ஏக்கம் பிரதிபலித்த விஜயராகவாச்சாரியாரின் தோற்ற முடையோர் எவரையும் நான் பார்த்ததே இல்லை."

சென்னை உயர்தர நீதி மன்றம் விஜயராகவாச்சாரியாரையும், அவரைச் சேர்ந்தோரையும் ஜாமீனில் விடுதலை செய்ய மறுத்து விட்டது. அதனால் அவர்கள் எல்லோரும் சில மாதங்கள் வரையில் சிறையில் வாசம் செய்யும்படியும் நேரிட்டு விட்டது.

ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் கீழ்க் கோர்ட்டாரின் தீர்ப்பை ஆட்சேபித்துச் சென்னை உயர் நீதி மன்றத்துக்கு அப்பீல் செய்து கொண்டார். அப்பொழுது பிரசித்தி பெற்ற வக்கீலாக இருந்த நார்ட்டன் அவருடைய வழக்கை வாதிக்கலானர்.

சென்னை உயர் நீதி மன்றத்தில் பிரதம நீதிபதியாக இருந்த ஸர் சார்லஸ் டர்னர் என்பவர் நார்ட்டன் அவர்களைப் பார்த்து, 'அவ்வளவு கவனமாக நீங்கள் படிப்பது தான் என்ன?' என்று கேட்டார்.

அதற்கு நார்ட்டன் 'ஜெயிலிலிருந்து கைதி அதி சாமர்த்தியமாக எழுதி அனுப்பியுள்ள வாதங்களை நான் படிக்கிறேன்' என்று பதிலளித்தார். பிரக்யாதி அடைந்த சட்ட நிபுணரான நார்ட்டன் அவர்கள் தம்முடைய வாதங்களைக் காட்டிலும் விஜயராகவாச்சாரியார் எழுதி அனுப்பிய வாதத்தை மேலானதாகக் கருதி அதைக் கொண்டே நியாயஸ்தலத்தில் வாதித்தார் என்றால், அது அதிசயமான விஷயம் அல்லவா?

* * *

சேலத்தில் நடந்த ஹிந்து—முஸ்லிம் கலகத்துக்கு ஆதிகாரணம் என்று கருதப் பட்ட இளம் வக்கீல் விஜயராகவாச்சாரியாரைச் சிறைப்படுத்தி அவருடைய நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்த முயன்றது அதிகார வர்க்கம். ஆனால் அதிகார வர்க்கத்தினர்



சாட்டிய குற்றத்திலிருந்து விஜயராகவாச்சாரியார் கௌரவமாக விடுதலை செய்யப்பட்டார். சென்னை உயர் நீதி மன்றத்தின் முழுச் சபை (Full Bench) விஜயராகவாச்சாரியாரின் தைரியத்தையும், சுதந்திர உணர்ச்சியையும் வெகுவாகப் பாராட்டியது. சிறையிலிருந்து விடுதலை அடைந்த அவரிடம் பிரதம நீதிபதி வெகு நேரம் அளவளாவிப் பேசிக் கொண்டிருந்தார்!

அதிகாரவர்க்கத்தினருக்கு, தாம் எத்தகைய மனிதர்மீது நடவடிக்கை எடுத்துக் கொண்டோம் என்பதை உணரச் சந்தர்ப்பம் வாய்த்தது! சிறையிலிருந்து விடுதலை அடைந்தவுடன் ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் தமக்கு விரோதமாகப் பொய்ச் சாட்சி சொல்லியவர்களின் பேரில் குற்றஞ் சாட்டி அவர்கள் தண்டனை அடையும்படி செய்தார். அவர் சார்பில் சாட்சி கூறிய பலர் தங்கள் வேலையை அநியாயமாக இழந்திருந்தனர். விஜயராகவாச்சாரியாரின் முயற்சியால் அவர்கள் திரும்பவும் அதிகாரிகளால் வேலையில் அமர்த்தப் பட்டனர்.

*

ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் சேலம் நகர சபையில் தேர்ந்தெடுக்கப் பட்ட எட்டு அங்கத்தினருள் ஒருவராக இருந்து வந்தார். அங்கத்தினர்கள் கடமையில் தவறினாலோ, நேர்மையற்று நடந்து கொண்டாலோ அத்தகையோரை நகர நிர்வாகத்திலிருந்து விலக்கச் சென்னை கவர்னருக்கு அக்காலத்தில் அதிகாரம் இருந்து வந்தது. அதை அனுசரித்துச் சென்னை கவர்னர், விஜயராகவாச்சாரியார் சேலம் கலவரத்தில் சம்பந்தப்பட்டவர் என்று நினைத்து அவரை நகர சபை அங்கத்தினர் பதவியிலிருந்து நீக்க உத்தரவு போட்டார். தாம் நீக்கப் பட்ட முக்கிய காரணத்தைத் தெரிவிக்க வேண்டி கவர்னருக்கு விஜயராகவாச்சாரியார் மனுச் செய்தார். அம்மனு நிராகரிக்கப்பட்டது.

எவ்விஷயத்தையும் அவ்வளவு சுலபத்தில் விட்டு விடுபவர் அல்ல விஜயராகவாச்சாரியார்! இங்கிலாந்திலுள்ள இந்தியா மந்திரி மீது ரூ 10,000-க்கு மான நஷ்ட வழக்குத் தொடுத்தார். பிரசித்தி பெற்ற இவ்வழக்கு சென்னை உயர் நீதிமன்றத்தில் தொடரப் பட்டது. அரசாங்கத்தின் சார்பாக அட்வகேட் ஜெனரல் வாதித்தார். வழக்கறிஞர்களான நார்ட்டனும், பிரான்ஸனும் விஜயராகவாச்சாரியாரின் சார்பில் வாதாடினார்கள்; முடிவில் வெற்றியும் பெற்றார்கள்.

விஜயராகவாச்சாரியார் தம் கட்சியில் நியாயம் இருக்கிறது என்பதை ஸ்திரப் படுத்தினார். அப்போது ஹைகோர்ட் நீதிபதியா யிருந்த கெர்னன் அவருடைய தீர்ப்பில் கூறியதாவது:

"தேசத்தில் மிகவும் கௌரவமும் முக்கியத்துவமும் வாய்ந்த பதவியை மனுதாரர் வகித்து வந்தார். அரசாங்கத்தாரின் செய்கை வாதிக்கு மக்களிடையே கௌரவம் குலையும்படி செய்து விட்டது. நியாயத்தை நிலை நிறுத்தித் தம்முடைய தன் மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ள வாதி இந்த வழக்குத் தொடர்ந்தது மிகவும் சரியானதாகும். வாதி திரவியத்தை இழந்து நஷ்டமடையா விட்டாலும், அவர் மீது குற்றம் சாட்டியதற்காக அவருக்குப் பிரதிவாதி (இந்தியா மந்திரி) நூறு ரூபாய் மான நஷ்ட ஈடாகக் கொடுக்க வேண்டும். வழக்குக்காகச் செலவு செய்த தொகையையும் பிரதிவாதி வாதிக்குக் கொடுக்க வேண்டும்."

உறுதியான தீர்மானத்துடனும் விடா முயற்சியுடனும் விஜயராகவாச்சாரியார் தம்முடன் தண்டனை அடைந்த மற்றப் பத்து நபர்களும் விடுதலை அடையும்படி செய்வித்தார். இங்கிலாந்திலும், இந்தியாவிலும் உள்ள அவரது நண்பர்கள் இந்த முயற்சியில் அவருக்கு உதவி புரிந்தார்கள். அப்பொழுது தான் அவருக்கு இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையின் ஆதி ஸ்தாபகரான ஏ. ஓ. ஹியூம் அவர்களின் நட்பும் ஏற்பட்டது. அவருடைய உதவியைக் கொண்டுதான் அப்பொழுது இந்தியாவின் கவர்னர்-ஜெனரலாக இருந்த லார்டு ரிப்பன் அவர்களால், தம்முடன் தண்டனை அடைந்தவர்கள் அனைவரும் விடுதலை பெறும்படி செய்தார். சுயநலமற்ற இத்தகைய செயல் அக்காலத்தில் மிகவும் அபூர்வமாகும்.

தண்டனை யடைந்த அவருடைய சகாக்கள் இரண்டு பிரிவுகளாக அந்தமான் தீவுக்கு



"கல்கி" ஆசிரியர் எழுதிய "மோகினித் தீவு" என்னும் சரித்திரக் கதையை நாடகமாக இயற்றிச் சென்னை இராணி மேரி கலாசாலை மாணவிகள் நவம்பர் 19ஆ மாலை மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபையில் நடித்தார்கள். நாடகம் சிறப்பாக வெற்றியுடன் நடந்து சபையோரின் பாராட்டுதலைப் பெற்றது. நாடகக் காட்சிகள் இவை ஒன்றை மேலே காணலாம். ★ ★ ★ ★

அனுப்பப் பட்டிருந்தனர். அவர்கள் விடுதலை அடைந்து சென்னைத் துறைமுகம் வந்து சேர்ந்த நாள் இந்தியா எங்கும் வெகு விமரிசையாகக் கொண்டாடப் பட்டது.

ஒப்புயர்வற்ற வீரத்திலும், தளரா ஊக்கத்திலும் சிறந்த இளம் ஏழைவக்கீல் இந்தியா முழுவதும் போற்றப் பட்டார். மக்கள் அவரை வெகுவாய்ப் புகழ்ந்தனர். முன் அவர் சென்னையில் கைது செய்யப்பட்டதை ஒரே வரியில் எழுதி முடித்த 'ஹிந்து' பத்திரிகை, அவரது இவ் வெற்றியைச் செவ்வனே பாராட்டி ஒரு பிரத்தியேக இதழ் வெளியிட்டது. கல்கத்தாவில் பிரசுரமாகும் 'அமிர்த பஜார் பத்திரிகை' ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரை 'சேலம் வீரர்" என்று போற்றியது.

பாழ்பட்டுக் கிடந்த பாரத தேசத்தின் விடுதலைக்குப் பாடுபட சேலம் எத்தனை எத்தனையோ அறிஞர்களையும், தொண்டர்களையும் பெற்றெடுத்துக் கொடுத்திருக்கிறது. அவர்களில் ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் குறிப்பிடத்தக்கவர்களில் ஒருவராவார். அவர் பொதுவாழ்விலும் சரி, உத்தியோக வாழ்விலும் சரி, குடும்ப வாழ்விலும் சரி தமக்கென ஒரு தனிமையைக் கடைப் பிடித்து அதை விடாப் பிடியாக நடத்திக் காண்பித்து வந்தார். நேர்மையும், நியாயமும், சத்தியமும் அவர் இரத்தத்தில் கலந்து ஓடிக் கொண்டிருந்தன.

ஸ்ரீ விஜய ராகவாச்சாரியார் மக்களின் மனிதரானார். பொது மக்களும், அதிகார வர்க்கத்தினரும் அவரை மரியாதையுடன் பாராட்டினர். நியாயத்திற்காகப் போராடி நியாயம் கிடைக்கும்வரை அஞ்சா நெஞ்சத்துடன் உழைக்கும் தீரர் என்று பெயரெடுத்தார். வெற்றியினால் செருக்கடையும் சாமான்ய மனிதரைப் போலன்றி, அவர் மேன்மையான பரந்த நோக்கத்துடன் மக்களுக்காகப் பாடு படலானார். ஒவ்வொரு விஷயத்திலும் அவர் வெற்றியைக் கண்டு புகழடைந்தார். சந்தர்ப்பங்கள் அவரைப் பொது ஜன ஊழியராக்கின. அவர் அத் தொண்டை என்றென்றும் கைவிடவில்லை.

# நறுமணம் விரும்புகிறவர்களுக்கு...

மைசூர் சந்தன சோப்பினால் ஸ்னானம் செய்வதே ஓர் அலாதியான இன்ப அனுபவம். அதன் மிருதுவான நுரை சருமத் துவாரங்களிலும் ஊடேறி சுத்தம் செய்து, சருமத்தை மழமழப்பாகவும் பளபளப்பாகவும் பட்டுப்போல் செய்கிறது. அதன் இன்பமூட்டும் ரம்மியமான மணம் உங்கள் தேக முழுவதும் பல மணி நேரம் நீடித்துப் பரிமளிக்கும்.




## மைசூர் சந்தன சோப்

**கவர்ன்மெண்ட் சோப் பேக்டரி, பெங்களூர்**

இந்திய சோப், வாசனைப் பொருள்கள் உற்பத்தியாளர் சங்கத்தின் அங்கத்தினர்

---

# அந்த இருமலை நிறுத்துக தொண்டை ரணத்தை சமனமூட்டி குணப்படுத்துக



பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு வலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும்போதே, இந்த ரசங்கள் ஆவியாக மாறி உங்கள் சுவாசத்துடன் தொண்டை சுவாசக் குழாய் மூலமாக சுவாசப்பைக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்ப ஸ்தானத்திற்கே சென்று வேலைசெய்கின்றன. அதனால்தான் பெப்ஸ் கைகண்ட குணமாய் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, உங்கள் சுவாசப் பையை காப்பாற்றி, கபத்தை உடைத்து, அடைப்பை நீக்குவதுடன் இன்ப்ளுயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.




பெப்ஸ் சாப்பிடுங்கள் **PEPS**

உலக பிரசித்தி பெற்ற

**தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகள்.**

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FPY. 25-TAM

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க்டவுன்

# அதிகப்படி தென்பு



நீங்களும் பெறுக

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

தென்புடன் விளங்குக.........உங்கள் தினசரி போஜனத்துடன் வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வருக...... அது சுருசுருப்பூட்டுவதும் ருசிமிகுந்ததுமான ஒரு டானிக். அதிகப்படி தென்பை வளர்க்க உதவுவதில் நிச்சய குணமுள்ளது. வாட்டர்பரீஸ் காம்பவுண்டு உங்களுக்கு அத்யாவசியமான புஷ்டிபதார்த்தங்களை வழங்கி, உங்களுக்கு சோர்வு, ஜலதோஷம்: இருமல், எதுவும் ஏற்படாத வாறு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கும் வயது வந்தவர், இளைஞர் யாவருக்கும் தேக வலிமை பெற இன்றியமையாதது.





# WATERBURY'S COMPOUND

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களை தென்புடன் வைத்திருக்கும்

NAS. 89-63

# அன்பின் வெற்றி



கி. துளசிஐயர்

முப்பது ஆண்டுகள் ஓடி மறைந்து விட்டன. ராஜம்மாள் இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகி விட்டாள். இரண்டும் இரண்டு ரத்தினங்கள். அவள் கணவன் முத்தண்ணாவுக்கு இப்பொழுது வயது சுமார் நாற்பதுக்கு மேல் இருக்கும்.

முத்தண்ணாவுக்குச் சொத்து என்ற முறையில் ஒன்றும் அப்படி குவிந்து கிடக்கவில்லை. ஒரு காலத்தில் நிறைய சொத்து உள்ள குடும்பம்தான். வேட்டையாடுவதில் அவர் பாட்டனாருக்குப் பிரியம். அவர் வேட்டைக்காகவும் படாடோபத்துக்காகவும் கொஞ்சம் நிலத்தை விற்றுத் தொலைத்தார். அவர் தகப்பனார் வம்புச் சண்டை. கோழி புறா பந்தயம், மற்றும் சில்லறை விளையாட்டுக்களில் கொஞ்சம் நிலத்தை விற்று விட்டார். அவர் மகன் முத்தண்ணா தன் மூதாதையர்களுக்குக் கொஞ்சம் குறைவில்லாமல் மீதி இருந்த கொஞ்ச நஞ்சம் சொத்துக்களையும் சில்லறையாக விற்றுத் தொலைத்தார். முத்தண்ணாவுக்கு எது எப்படி இருந்தாலும் அறுசுவையுடன் வயிறு புடைக்கத் தின்று தீர்க்க வேண்டும். அத்துடன் பரம ரஸிகர். அவருக்குத் தெரியாத லலித கலைகளே கிடையாது என்று சொல்லலாம்.

முத்தண்ணா மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் படித்துப் புலவர் பட்டம் பெற்றவர். முறையாகச் சங்கீதமும், பரதநாட்டிய சாஸ்திரமும் பயின்றவர். இருந்தாலும் உடம்பு வளையாமல், உழைத்துப் பாடுபடாமல் சொத்தை விற்றுத் தின்ற பழக்கம். நிலங்கள் விற்றுத் தீர்ந்ததும் கடன் வாங்கினார். கடனுக்காகக் குடியிருந்த வீடு தொலைந்தது. கடைசியில் ராஜம்மாளின் நகை நட்டுக்களையும் விற்றார். குழந்தைகள் சரோஜா - மணி இவர்களின் நகைகளையும் விற்று ஒழித்தார்.

ராஜம்மாளின் பெற்றோர் அவள் நிலை கண்டு இரங்கி அவளுக்கு ஒரு வீட்டை வாங்கிக் கொடுத்தார்கள். அந்த வீட்டில் ராஜம்மாள் சகோதரனின் உதவியால் வாழ ஆரம்பித்தாள். முத்தண்ணாவின் குடும்பம் சாப்பாட்டுக்கு அதிகக் கஷ்டமில்லாமல் கௌரவமாக நடந்து கொண்டிருந்தது.

ராஜம்மாள் அன்பே உருவானவள். கணவரே தெய்வம் என்று கருதும் நம் பாரதப் பண்பாட்டுக்கு ஒரு எடுத்துக் காட்டாக வாழ்ந்து வந்தாள். அந்த அம்மாள் வாய் திறவாமல் முகம் கோணாமல் மனதில் என்னளவும் வருத்தமில்லாமல் இருந்த நகைகளையெல்லாம் கொடுத்தாள். எல்லாவற்றையும் விற்றுவிட்டார் முத்தண்ணா.

அன்று சமையல் அறையில் ராஜம்மாள் சமையல் செய்து கொண்டிருந்தாள். கைத்தடியுடன் சட்டாம்பிள்ளையைப் போல் உட்கார்ந்து அதிகாரம் செய்து கொண்டிருந்தார் முத்தண்ணா. சமையல் ஆனவுடன், சின்னஞ் சிறு குழந்தைகள் சாப்பிடுவதற்கு முன்பாகவே சாப்பிட்டு விட்டுக் கிளம்பி விட்டார். இவருடைய முன் கோபமும் மூர்க்க குணமும் குழந்தைகளை அவரிடம் நெருங்கவிடாமல் செய்து வந்தன. குழந்தைகள் சரோஜாவும் மணியும் தங்கள் தாயைத்தான் வளைய வளையச் சுற்றி வருவார்கள்.

வீட்டில் மூதேவி கொல்லைப்புறமாக வந்து லக்ஷ்மியைத் தெருப்பக்கமாக விரட்டினாள். வறுமை கோரத் தாண்டவமாடியது. பஞ்சம் அதிகரிக்க அதிகரிக்கத் தம்மது பகுத்தறிவையும் கொஞ்சம் கொஞ்சமாக இழந்து வந்தார் முத்தண்ணா.

"உன்னை மணந்து கொண்டால், உங்கப்பன் எனக்கு ஒரு வேலி நிலம் எழுதி வைக்கிறேன் என்று சொன்னானே, மறந்து விட்டேன் என்ற ஞாபகமோ! அதை வாங்கி வந்தால்தான் வீட்டில் நுழையலாம் ......" என்று கத்தினார்.

"இந்த வீடு யாருடையது! உங்க அப்பன் வாங்கி வைத்ததா! இல்லை நீங்கள்தான் சம்பாதித்ததா!" என்று கேட்கலாமா என்று ஒரு கணம் நினைத்தாள் ராஜம்மாள். அடுத்த கணம் அவளையும் அறியாமல் வாய் பேசாமல் மௌனமாகி விட்டாள்.

"நிலமா...பெரிது..." என்று அந்த அம்மாள் பேச்சை முடிப்பதற்குள், "ஆமாம்! அழகு ராணி நீதானே பெரிசு..." என்றார் குத்தலாக. ராஜம்மாள் அப்படியே மனம் குன்றிப் போனாள்.

வீட்டிலுள்ள சகல ஜீவராசிகளும் அன்று பட்டினி. ஆனால் முத்தண்ணாவுக்கு மட்டும் ராஜம்மாள் எப்படியோ சமைத்துப் போட்டாள். குழந்தைகளும் மனைவியும் பட்டினி கிடக்கிறார்களே என்ற இதய உணர்ச்சியே இல்லாமல் சாப்



பாட்டை ரசித்துப் புசித்துக் கொண்டிருந்தார் மூத்தண்ணு. 'கடக்'கென்று ஒரு சத்தம் கேட்டது. ராஜம்மாளின் போதாத காலம். எப்படியோ சாதத்தில் ஒரு சிறு கல் கிடந்து விட்டது. மூத்தண்ணுவுக்கு மூக்குக்கு மேல் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது.

"இது என்ன சாப்பாடா! உனக்கு அவ்வளவு அலட்சியம் ஏற்பட்டு விட்டதா! இனி இந்த வீட்டில் இருக்க மாட்டேன். உன் முகத்தில் விழித்தாலே பொடிக்குப் புகையிலை கிடைக்காது" என்று கத்த ஆரம்பித்து விட்டார்.

அவருக்கு நன்றாகத் தெரியும். அடுப்பு மூட்ட விறகில்லை. உலையில் போட அரிசியில்லை. இருந்த செப்புக் குடத்தையும் விற்றாகி விட்டது. அதற்குப் பதில் இருந்த மண் குடத்தையும் கோபத்தில் தூக்கிப் போட்டு உடைத்தாகிவிட்டது என்று. இந்த நிலையில் எப்படியோ சாப்பாடு போட்டிருக்கிறாள் என்பது அவர் அறியாததல்ல; இருந்தாலும் காக்காயாகக் கத்தித் தீர்த்தார்.

ராஜம் ஒன்றும் சொல்லாமல் கதவு அருகில் நின்றாள். "என்ன நான் கேட்கிறேன், என்னமோ ஒன்றும் தெரியாதவள் மாதிரி நிற்கிறாயே!" என்றார். ராஜத்தின் முகம் வெளிறியது.

"ஓஹோ! அவ்வளவுக்கு வந்து விட்டாயா! இனி எனக்குப் பெண்டாட்டியும் வேண்டாம்; பிள்ளையும் வேண்டாம். நான் இதோ வெளியே புறப்பட்டு விடுகிறேன். இனி இந்த வீட்டில் என் கால் தூசியும் படாது. எக்கேடாவது கெட்டுத் தொலைந்து போங்கள். எனக்கு அதைப் பற்றிக் கவலையில்லை!" என்றவாறே புறப்பட்டு விட்டார்.

ராஜம்மாள் அவர் காலைப் பிடித்துக்கொண்டு கதறினாள். கண்ணீரால் அவர் கால்களைக் கழுவினாள். ஆனால் கல்லுக்கும் உறுதியான நெஞ்சம் படைத்த அந்த முரட்டு மூத்தண்ணுவிடம் அவள் வேதனை ஒன்றும் பலிக்கவில்லை. "உங்க அப்பன் எனக்கு ஒரு வேலி நிலம் எழுதி வைப்பதாகச் சொன்னான். அப்படி எழுதிக் கொடுத்தால்தான் இந்த வீட்டில் இருப்பேன்" என்று சொல்லி வீட்டை விட்டு வெளியே கிளம்பி விட்டார்.

★

பத்து ஆண்டுகள் உருண்டோடி விட்டன. இன்று நினைத்தால் கூட ராஜத்துக்குப் பகீரென்றிருக்கிறது. இன்னும் கணவன் வந்தபாடில்லை. குழந்தைகளைத் தன் பெற்றோர்களின் உதவியால் ஒரு குறையும் இல்லாமல் வளர்த்தாள். மணியைப் பத்தாவது வகுப்பு வரையிலும் படிக்க வைத்தாள். சரோஜாவையும் பத்தாம் வகுப்பு வரையில் படிக்க வைத்ததுடன் பாட்டும் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்திருந்தாள். இது அவள் மனத்தில் பூரண களிப்பை ஊட்டியது.

கணவனின் பிரிவை அவளால் தாங்கவே முடியவில்லை. அவர் நினைவு அவளை வாட்டி வதைக்கும். "அவர் வரமாட்டாரா!" என்று எண்ணுவாள். அவள் சிந்தனை சிறகடித்துப் பறக்கும். எண்ணங்கள் காற்றில் அகப்பட்ட சிறகுகள் போல் எட்டுத் திக்குகளிலும் வானளாவப் பறந்து இடம் தெரியாமல் மறையும். அப்பொழுது குழந்தைகளின் இன்முகம் அவள் துயரத்தை அகற்றும்.

ராஜம்மாள் இப்பொழுது தன் பிறந்த வீட்டுக்கே சென்று விட்டாள். பிறந்த வீட்டிலும் நிம்மதியற்று இருந்தாள். பொறுமையே உருக்கொண்ட ராஜம்மாளுக்குச் சிறுமையே உருவெடுத்த ஒரு தமையன். மகா முரடன். வீட்டில் தன் சகோதரியைச் சமாதானப் படுத்துவதாக நினைத்துக் கொண்டு. "அந்த மூத்தண்ணுவை இலேசில் விட மாட்டேன். நீ வேண்டுமென்றால் பார் ராஜம்! இந்தத் தம்பிக்கோட்டை அரிவாளால் வாழைத்தண்டு மாதிரி அவனைச் சீவவில்லையானால் என் பெயரை மாற்றிக் கூப்பிடு" என்று அலறினான். சகோதரனின் அன்பு அவள் உடலில் ஆயிரம் சாட்டைகளைப் பாய்ச்சுவது போலிருக்கும். துடித்துப் போனாள்.

"அண்ணா! நீங்கள் அவரைப் பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாம். உங்களுக்கு நான் இங்கிருப்பது பிடிக்கவில்லையென்றால் இப்பொழுதே என் குழந்தைகளை அழைத்துக் கொண்டு போய் விடுகிறேன். அதற்காக இப்படி நீங்கள் அவரைப் பற்றிக் குறைகூறத் தேவையில்லை..." என்றாள்.

இதைக் கேட்டதும் கருப்பண்ணனுக்கு-இது தான் அவன் பெயர்-ஒன்றும் சொல்லத் தோன்றாது. ஒரு கணம் மௌனமாக இருந்தான். அடுத்த கணம், "ராஜம்! ஏதோ ஆத்திரத்தில் சொல்லி விட்டேன். நீ வேண்டுமானால் பார். எப்படியாவது ஒரு வேலி நிலத்தைச் சேர்த்து உன்னை உன் கணவருடன் சேர்த்து வைத்து விட்டு மறு வேலை பார்க்கிறேன்" என்று சொல்லி விட்டு வெளியேறி விட்டான். கருப்பண்ணன் முரடனானாலும் நல்ல மனம் படைத்தவன். கஷ்டப்பட்டு இந்தப் பத்தாண்டில் ஒரு வேலி நிலம் சேர்த்தான், தன் தங்கை வாழ்ந்தால் போதும் என்ற நினைப்பில். ஆனால் அந்த மூத்தண்ணுவை எங்கு போய், எப்படித் தேடிப் பிடிப்பது என்பது தான் அவனுக்குப் புரியாத புதிராய் இருந்தது.

வீட்டை விட்டு வெளியேறிய மூத்தண்ணு இப்பொழுது தன் வயிற்றுப்பிழைப்புக்குத் தானே வழி தேட வேண்டியதாயிற்று. தனக்குப் பரத நாட்டியக் கலையில் இருந்த பயிற்சியைக் கொண்டு மோகனா என்ற சிறுமிக்குப் பரத நாட்டியம் சொல்லிக் கொடுத்தார். மோகனாவின் அதிர்ஷ்டம் மூத்தண்ணுவுக்கும் கொஞ்சம் கிடைத்தது. சிறுமி மோகனா குமாரி மோகனாவானாள். பிறகு நடன ராணி மோகனாவானாள். நடன ராணி மோகனாவுடன், கையில் தாளத்தோடு அவள் சென்ற இடத்துக் கெல்லாம் நிழல் போல் சென்று அவளுக்குப் பதம் பாடி வந்தார். ரசிகர்கள் மெய் மறந்து நடன ராணியையும் நட்டுவனாரையும் புகழ்ந்து தள்ளினர். மூத்தண்ணு வீட்டை மறந்து, தம்மையும் மறந்து கலையோடு கலையாக ஐக்கியமாகி விட்டார்.

ஒரு நாள் நடன ராணி மோகனாவின் எதிரே வீற்றிருந்தார் நட்டுவனார் மூத்தண்ணு. வெற்றிலையை மடித்து மடித்துத் தள்ளிக் கொண்டே கலையைப் பற்றியும் பெண்களின் பெருமையைப் பற்றியும் வெறும் பேச்சாயில்லாமல் மூத்தண்ணு உபந்நியாசமே செய்து கொண்டிருந்தார்.

அப்பொழுது, "ஸார், பேப்பர்!" என்று பத்திரிகைக்காரப் பையன் உள்ளே ஒரு பத்திரிகையை எறிந்து விட்டுப் போனான்.

பத்திரிகையை எடுத்து பார்த்தார் நட்டுவனார். எதையோ கண்டு திடுக்கிட்டவராய் அப்படியே இருந்தார். ஒரு முறை அவர் உடல் குலுங்கிற்று.

"என்ன!" என்றாள் மோகனா.

"ஒன்றுமில்லை......" என்று சுருக்கமாக வார்த்தையை முடித்து விட்டார். அவளும் ஒன்றும் சொல்லாமல் உள்ளே போய்விட்டாள்.

அன்று மாலை நட்டுவனார் மோகனாவின் வீட்டை விட்டு வெளியேறி விட்டார். மோகனா தவித்தாள். அவள் வளர்ப்புத் தாய் பிழைப்பு போய் விட்டதே என்று கலங்கினாள். இருந்தாலும்

# 14 நாட்களில் மக்ளீன்ஸ் உதவியால் அதிக வெண்மையான பற்கள்




இப்பொழுது 14 தினங்களுக்குள் அதி வெண்மையான பற்களை நீங்களும் பெறலாம் இதை உறுதியாகச் சொல்லுங்கள் —பிரதிதினமும்—தினசரி இருமுறை உங்கள் பற்களை நன்றாக மக்ளீன் செய்யுங்கள் ஆரம்பமுதலே, மக்ளீனிலுள்ள விசேஷ பொருள்கள், மிருதுவாகவும் அபாயமில்லாமலும் உங்கள் பற்களின் டன்ன அழுக்கான கறைகளை போக்கி, அவைகள் இயற்கையான ஒளி வீசச் செய்வதைக்காண்பீர். 14 நாட்களுக்குள் — அல்லது அதற்கும் குறைவாகவேகூட நீங்கள் பெருமைப்படக்கூடிய பற்களை அடைவீர்கள் — மக்ளீன் வெண்மையான பற்கள், ஆரோக்கியமான பற்கள்

க்ளோரோபில் சேர்த்தும் கிடைக்கும்.




## மக்ளீன்ஸ்

பெராக்ஸைட் பற்பசை

பற்களை அதிக வெண்மையாக்குகிறது.

சமாதானத்துக்காக, "எங்கேயாவது வெளியே போயிருப்பார், வந்து விடுவார்!" என்றான்.

ஒரு நாள் எதிர் பார்த்தான், இரண்டு நாள் எதிர் பார்த்தான். ஆள் மறைந்தவர் மறைந்தவர்தான். திரும்பி வரவில்லை. மோகனுக்கு அந்தப் பழைய பத்திரிகையின் ஞாபகம் வரவே அதைத் தேடிப் பிடித்து அதில் ஏதாவது விசேஷமிருக்கிறதா என்று புரட்டிப் பார்த்தான். அதில் பின்வரும் விளம்பரத்தைக் கண்டு திடுக்கிட்டான்.

*எனது அருமை மைத்துனர் மூத்தண்ணா அவர்களுக்கு,*

*தாங்கள் பத்து ஆண்டுகளாக எங்களை விட்டுப் பிரிந்த துயரம் தாளவில்லை. தங்கள் திருமணத்துக்குச் சீராக நிலம் தரவில்லையென்பதற்காகத் தாங்கள் கோபத்தோடு போனவர்கள் என்றைக்காவது ஒரு நாள் தங்கள் மனைவியையும் குழந்தைகளையும் பார்க்க வருவீர்கள், வருவீர்கள் என்று எதிர் பார்த்து ஏமாற்ற மடைந்தோம். தங்களுக்காகத் தங்கள் மனைவியும் மக்களும் ஏங்கிக் கிடக்கிறார்கள். தங்களுக்கு வேண்டிய நிலமும் தங்களுக்காகக் காத்திருக்கிறது. உடனே வரவும். — கருப்பண்ணன்.*




இதைப் படித்த மோகனின் உள்ளம் உருகி விட்டது. தன் தாயைக் கூப்பிட்டுக் காட்டினான். அவளும் திக்குமுக்காடிப் போனாள்.

"நம்ம வாத்தியாரைப் பார்த்தீர்களா அம்மா! எவ்வளவு நல்லவர் என்று" என்றான்.

"ஆமாம், வாத்தியார் நல்லவர்தான்! படுபாவி! பெண்டாட்டியையும் பிள்ளைகளையும் தவியாய்த் தவிக்க விட்டு வந்தவன். தேனில் போட்ட ரஸகுல்லா மாதிரி பேசி அல்லவா நம்மை மயக்கி விட்டான். அடேயம்மாடி! அவன் வேதாந்தமும் நடிப்பும் பரம்பரை கட்டுவனார் கூடக் கெட்டான் போ! எனக்கு மட்டும் அப்பொழுதே தெரியும், இவன் ஒரு சந்தேகப் பேர்வழி என்று. நீதான் 'குரு குரு' என்று குதித்தாய். ஏதோ, நம்மையும் கெடுக்காமல் நல்ல படியாகப் போய்ச் சேர்ந்தானே. அதை நினைத்தாவது பழனி ஆண்டவனை வந்து நமஸ்காரம் பண்ணு. உம், வா!" என்று மோகனைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனாள் சுவாமி அறைக்கு.

★

மூத்தண்ணா ஊர் வந்து சேர்ந்தார். வீட்டை அடைந்தார். திண்ணையில் அவர் குழந்தைகள் மணியும் சரோஜாவும் ஏதோ படித்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்குத் தங்கள் தந்தையைப் பற்றிய உருவமே மறந்து போய் விட்டது. புதிதாக வந்த மூத்தண்ணாவை இருவரும் ஒரு முறை கூர்ந்து பார்த்தனர்.

"யார் வீட்டிலே!" என்றார் அதிகாரமாக. இந்த அதிகாரப் பேச்சு குழந்தைகளுக்கு அவர் மேல் ஒரு வெறுப்பை உண்டாக்கியது. இருந்தாலும் ஏதோ ஒரு பாசம் அவர்களை அறியாமல் அவர் மீது குழந்தைகளுக்கு ஏற்பட்டது.

ராஜம்மாள் உள்ளிருந்த படியே இந்த அதிகாரக் குரலைக் கேட்டாள். அவளை யறியாமல் அவள் உள்ளம் பயந்தது. மெல்ல எட்டிப் பார்த்தாள். ஆனால் ஒன்றும் தெரியவில்லை. குழந்தைகள் மட்டும் வந்தவரிடம் காரசாரமாகத் தர்க்கம் செய்வது காதில் விழுந்தது.

"யாரய்யா நீங்கள்! தெரிந்தவர்கள் கூட இவ்வளவு அதிகாரம் பண்ண மாட்டார்கள் போலிருக்கிறது. நீங்கள் என்னமோ ஒரேயடியாகச் சத்தம் போடுறீங்களே!" என்று கேட்டான் மணி.

"நான் யார் தெரியுமா!" என்று கர்ஜித்தார் மூத்தண்ணா.

"நீங்கள் முதலில் 'நான் யார்' என்று சொல்லியிருந்தால் உங்களிடம் யார் இப்படியெல்லாம் பேசப் போகிறார்கள்" என்று பதில் அளித்தாள் சரோஜா.

ராஜம்மாள் ஓடி வந்து மூத்தண்ணாவின் காலில் விழுந்து வணங்கினாள். அவள் முகம் மலர, உள்ளம் குளிர உடலெல்லாம் அவளுக்கு என்னவோ செய்தது. குழந்தைகள் ஒரு விநாடியில் புரிந்து கொண்டனர். அஞ்ஞாத வாசம் செய்து விட்டு வந்த அப்பா இவர்தான் என்று. அவர்கள் முகமும் மலர்ந்தன.

குழந்தைகளுக்குத் தங்கள் தந்தையை அப்படியே கட்டித் தழுவ வேண்டும் போல் தோன்றியது. இவ்வளவு காலமும் மறந்திருந்த தகப்பனின் கல் நெஞ்சம் அவர்கள் அன்புக்கு முட்டுக் கட்டை போட்டது. அவர்கள் மௌனமாக நின்றார்கள்.

"எங்கே நிலம்!" என்றார் மூத்தண்ணா.

"ராஜம்மாளுக்கு ஒரு கணம் பிரக்ஞையே தவறி விடும் போலிருந்தது. பத்து ஆண்டுகள் கடந்து வீட்டுக்கு வந்தவர், "குழந்தைகள் சௌகரியமா! ஐயோ! ராஜம் உன்னை எவ்வளவு துன்புறுத்தி விட்டேன். என்னை மன்னித்து விடு!" என்று சொல்லா விட்டாலும், செய்த தவறை இன்னும் உணராமல் இப்படிப் பண ஆசை பிடித்துத் திரிகிறாரே என்று நினைத்தாள். கணமே தன்னைச் சுதாரித்துக் கொண்டாள்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த சரோஜாவும் மணியும் தங்களை மறந்து விட்டவர்களாகத் தோன்றினர். ஆத்திரம் தாங்கவில்லை. அவர்களுடைய இளம் இரத்தம் பொங்கிற்று. அவர்கள் நாக்கு சீர்திருத்தம் பேசத் துடியாய்த் துடித்தது. இருந்தாலும் சரோஜாவும் மணியும் ராஜம்மாளுக்குப் பிறந்த குழந்தைகள் அல்லவா! அடக்கமாகவே இருந்தனர்.

"அம்மா! இவர்தான் எங்கள் அப்பாவா!" என்று ஆரம்பித்தாள் சரோஜா.

"ஆமாம்! உங்கள் அருமை அப்பாதான்" என்றார் வெடுக்கென்று மூத்தண்ணா.

"ஓகோ! தாங்கள் தானா எங்கள் தந்தை. அப்பா! வணங்குகிறோம்! ஆசீர் வதியுங்கள்!" என்று இரு குழந்தைகளும் சொல்லி வைத்தாற் போல் சொன்னதைக் கேட்ட தாய்க்கு ஆனந்தம் கரை புரண்டு ஓடிற்று. ஆனால் மூத்தண்ணாவின்

கடு கடுத்த முகத்துக்கு முன் அவன் ஆனந்தம் நெருப்பிலிட்ட பஞ்சு போல் பொசுங்கிவிட்டது.

"ராஜம்! என்ன இதெல்லாம்! பிள்ளைகளை வளர்த்திருக்கிற லட்சணமா இது......" என்று முணு முணுத்தார் முத்தண்ணா.

"ஒன்றுமில்லை! தங்களைப் பற்றி அவர்களுக்குத் தெரியாது மணி சரோஜா! நீங்கள் இருவரும் உள்ளே போங்கள்!" என்று அமைதியாகச் சொல்லிக் கொண்டு உள்ளே வந்த கருப்பண்ணனின் நிதானத்தைக் கண்டு ராஜம்மாள் வியந்து போனாள். அண்ணன் முரடனா யிருந்தாலும், எவ்வளவு மன அடக்கம். உலகத்துக்குப் பயந்து தன் சுபாவத்தையும் விட்டுத் தனக்காகப் பாடு பட்ட கருப்பண்ணனை அன்போடு பார்த்தாள் ராஜம்மாள். அவள் சகோதர உணர்ச்சி அவளை மெய் மறக்கச் செய்து விட்டது. அவள் கண்கள் நீரைப் பெருக்கின.

கருப்பண்ணன் தன் பையிலிருந்து ஒரு பத்திரத்தை எடுத்துத் தாம்பாளத்தில் பழம் தாம்பூலத்தோடு வைத்து முத்தண்ணாவிடம் மரியாதையாகக் கொடுத்தான்.

முத்தண்ணா பத்திரத்தை முதலில் எடுத்துப் பார்த்தார். அதில், தான் ஒரு வேளி நிலத்துக்கு அதிபதி, பெருநில கிழார் என்பதை அறிந்ததும் உலகமே தன் ஆட்சியின்கீழ் வந்து விட்டதாக அவருக்கு ஒரு பிரமை ஏற்பட்டது.

"என்ன யிருந்தாலும் உங்கள் மனசெல்லாம் பெரிய மனசுதான். என்னுடைய இந்தச் செய்கை நினைத்துப் பார்த்தால் எனக்கே கஷ்டமாக இருக்கிறது. இனி உங்களை யெல்லாம் பிரியாமல் வாழ்வேன்; நீங்கள் குறைவாக நினைக்க இடம் தர மாட்டேன். ராஜம்! குழந்தைகளை என் அருகில் வரச்சொல்" என்றார். "'மணி! சரோ!' இனி நான் உங்களை விட்டுப் பிரியமாட்டேன்" என்று அணைத்துக் கொண்டார். உணர்ச்சியுடன் பேசிய முத்தண்ணாவின் பேச்சு எல்லோரையும் இன்பத்தில் ஆழ்த்தியது.

இரண்டு வருடங்கள் குடும்பச் சக்கரம் இன்பத்திலும் இன்பமா யிருந்தது. "என் கணவர் எவ்வளவு நல்லவர். நான் உண்மையிலேயே பாக்கியசாலிதான்!" என்று உளம் பூரித்தாள் ராஜம்.

"அப்பா! எவ்வளவு நல்லவர் அம்மா!" என்று குழந்தைகள் தங்களை மறந்து கூறினார்கள்.

முத்தண்ணாவுக்குக் குடும்பத்தில் மறுபடியும் சலிப்பு தட்ட ஆரம்பித்தது. வருமானம் போதவில்லை. அவருடைய செலவும் அவருடைய பழைய பெருந்தன்மைக்கு உகந்ததாயில்லை. படாடோபத்தில் வாழ ஆரம்பித்தார். கடன் வாங்கினார். கடனை அடைக்க நிலத்தை விற்றார்; விற்றுக் கொண்டே யிருந்தார். சில ஆண்டுகளுக்குள் ஒரு வேலி நிலத்துக்கும் ஒரு முடிவைக் கட்டினார்.

பழைய குணங்கள் தலை தூக்கிற்று. கோபம் வந்தது. அறிவை மறைத்தது. மனிதத் தன்மையை இழந்தார். மனைவி குழந்தையென்ற வித்தியாச மில்லாமல் சீறி விழுந்தார்.

தந்தையின் இந்த நாடகமெல்லாம் மணிக்கும் சரோஜாவுக்கும் சற்றும் பிடிக்கவில்லை. ஆனால் சில நேரங்களில் தந்தையின் கோபம் தாயிடம் அர்த்தமில்லாமல் மிதமிஞ்சிப் போகும்போது அவர்கள் குறுக்கிடுகிறார்கள். இப்பொழுதெல்லாம் தந்தை வீட்டுக்கு வந்து வெளியே போனால் புயலடித்து ஓய்ந்தாற் போலிருக்கும் அவர்களுக்கு.

கணவரின் போக்குத் தெரிந்த ராஜம் தனக்கென்று கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்து வைத்திருந்த பணத்தைக் கொண்டு இரண்டு பசு மாடுகள் வாங்கினாள். அதுபோக ஒரு ஆயிரம் ரூபாயை வட்டிக்கு விட்டாள். வட்டிக்கு விடுவது ஒரு மூதேவி பிடித்த தொழில் என்று தெரிந்தும் வேறு வழியில்லாததால் அதைச் செய்தாள்.

குடும்பக் கஷ்டத்தை உணர்ந்து, மனைவியின் அறிவைப் பாராட்டும் அளவுக்கு முத்தண்ணாவின் மனத்தில் அவ்வளவு நேர்மையும் சக்தியுமில்லை. வேலை செய்ய முத்தண்ணாவுக்கு ஆசைதான். ஆனால் தமக்குத் தெரிந்தவர்களுக்குமுன் தொழில் செய்து பிழைப்பது கேவலம் என்று எண்ணினார். அதோடு தான் ஒரு பரம்பரைப் பெரிய மனிதர் குடும்பத்தில் வந்தவர். ஒருவனிடம் போய் வேலை கேட்பது கௌரவக் குறைவல்லவா! என்ற சோம்பேறி சித்தாந்தம் படைத்தவர். ஜனங்கள் முத்தண்ணாவைப் பார்த்து நல்லவர் என்று சொல்லக் கூசினார்கள். ஆனால் அகம்பாவி, ஊதாரி என்று சொல்லத் தயங்கினார்களில்லை.



மாதர் நலனுக்காகப் பல்லாண்டுகளாக மாபெரும் சேவை செய்து வருபவர் சகோதரி சுப்புலட்சுமி யம்மாள். அவர்களது அரிய சேவையைப் பாராட்டித் தியாகராயநகர் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியில் நவம்பர் மாதம் 29-ம் தேதி மாலை ஒரு மாபெரும் கூட்டம் கூடியது. முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் தலைமை வகித்தார்கள்; அவ்வம்மையாரின் அரிய சேவையைப் பாராட்டிப் பேசி, உருவப் படத்தைத் திறந்து வைத்தார்கள். சகோதரி சுப்புலட்சுமி அம்மையாரின் அரிய தொண்டினால் நற்பயனை அடைந்த பல மாதரசிகள் உள்ளக் களிப்போடு தங்கள் நன்றி யுணர்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர்.



# அயர்ந்து சுகமாகத் தூங்குங்கள்!



நம் தேகத்திற்கு அயர்ந்த தூக்கம் மிகவும் முக்கியம். ஏனெனில் தூக்கத்தின் போது இயற்கையானது உடலுக்கும் மூளைக்கும் சக்தியை ஊட்டுகிறது. படுக்கப் போகுமுன் ஒரு கப் ருசி மிகுந்த 'ஓவல்டின்' இயற்கைக்கு இரு விதங்களில் உதவுகிறது. புத்துணர்வைத் தரும்; அயர்ந்த தூக்கத்தைத் தரும். அத்துடன் செலவாகும் சக்தியை சேகரிக்க உதவுகிறது. ஓவல்டின் எல்லா விதங்களிலும் சிறந்தது! அதில் பழுத்த பார்லி மால்ட், ஆடைநிரம்பிய சத்தமான பசும்பால், சிறந்த கொக்கோ, பால்பௌடர்கள், பி&டி விட்டமின்களும் இருக்கின்றன. உங்கள் கடையில் இந்த ருசி மிகுந்த உணவு பானத்தைக் கேட்டு வாங்குங்கள்; நினைவிருக்கட்டும். அது ஓவல்டின் தானு என்று கவனியுங்கள்!




விநியோகஸ்தர்கள்:
கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.

## ஓ வ ல் டி ன்

**உலகில் சிறந்த ஆரோக்கிய பானம்**

OV.396

ராஜம் வாரம் ஒரு முறை நெய் எடுத்து விற்று வந்தாள். ஒரு சமயம் வீட்டில் இரண்டு சேருக்கு மேலிருந்த வெண்ணெய் ஒரு சேருக்குக் குறைந்திருந்தது. இதைக் கண்ட ராஜத்தின் முகம் கோபத்தால் சிவந்தது.

"சரோ! இங்கிருந்த வெண்ணெயை யார் எடுத்தது!" என்றாள். காரணம் அந்த வெண்ணெயை உருக்கி நெய்யாக்கிக் கடைக்குக்கொண்டு போய் விற்றுக் காசு வந்தால்தான் மத்தியான சாப்பாடாகும். வேளை தவறிச் சாப்பாடு போட்டால் கணவர் தன்னை மறந்து விடுவார். சம்பாதிக்கா விட்டாலும் கோபத்திற்கு ஒரு காலும் குறைச்சல் இருந்ததில்லை மூத்தண்ணாவுக்கு.

"ஏன், நான்தான் எடுத்தேன்" என்றவாறே உள்ளே வந்தார் மூத்தண்ணா.

"வெறும் வயிற்றில் வெண்ணெயைத் தின்றால் வயிற்றுக்கு ஆகுமா.......!" என்று தன்னை மீறிச் சொல்லி விட்டாள் ராஜம்.

"என்ன சொன்னாய்! வயிற்றுக்கு ஆகுமா! நான் எவ்வளவு பெரிய பரம்பரையில் வந்தவன் என்பது உனக்குத் தெரியுமா! எத்தனை ஆயிரம் வேலி மிராசுதார் எல்லாம் நான் பத்துக் கறியோடு சாப்பிடும் காசுகளைப் பார்த்து, 'மூத்துவுக்கும் என் பெண்ணைத் தாரேன்; என் பெண்ணைத் தாரேன்' என்று தவம் கிடந்து கெஞ்சினார்கள். அவர்களை யெல்லாம் தள்ளி விட்டு உன்னை மணந்து கொண்டேன் பார். அதற்கு இதுவும் வேண்டியதுதான் இன்னமும் வேண்டியதுதான்" என்று தன் பெருமையைக் கூறினார்.

"உம்! மத்தியான சாப்பாடு இன்று அவ்வளவு தான்..." என்று வார்த்தையை முடிக்காமலே உள்ளே போன ராஜத்தைப் பயங்கரமாக இழுத்துப் பிடித்து நிறுத்தினார்.

"இன்று மத்தியானம் சாப்பாடு இல்லை என்று சொல்லும் அளவுக்குத் தைரியம் வந்து விட்டதா உனக்கு!" என்று கத்தினார். அடுத்த கணம் ராஜத்தைப் பாய்ந்து அடிக்கப் போனார்.

சரோஜாவும் மணியும் குறுக்கே போய் நின்றனர். இதைக் கண்டு மூத்தண்ணா திகைத்தார்.

"உம்! அவ்வளவு தூரம் கை நீளுவது சரி யல்ல! இது வரையில் செய்த கொடுமைகள் போதும்!" என்றான் மணி நிதானமாக.

"ஓகோ! அவ்வளவு திமிரா உங்களுக்கு!" என்று கையிலிருந்த தடியை ஓங்கினார். மணி அவரை லாகவமாகத் தூக்கி வந்து திண்ணையில் வைத்தான். இந்தக் காட்சியைக் கண்ட சரோஜாவுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. 'களுக்' கென்று சிரித்தும் விட்டாள். இதைப் பார்த்த தாய்க்கு வெட்கம் பிடுங்கித் தின்றது.

மூத்தண்ணா தம்மை மறந்தார். கையிலிருந்த தடியால் மணியின் மண்டையைப் பதம் பார்த்து விட்டார். "ஐயோ! அண்ணா!" என்று அலறி விழுந்தாள் சரோஜா. "ஐயோ! என் செல்வமே!" என்று கத்தினாள் தாய்.

மணி நினைவிழந்தான்.

அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் விரைந்து, டாக்டரை அழைத்து வந்து மணிக்கு வேண்டிய சிகிச்சைகளைச் செய்தனர்.

டாக்டர், "பையன் நிலைமை ரொம்ப ஆபத்து தான், ஐயா!" என்று எச்சரித்தார்.

பையன் நினைவு வந்த பொழுது, "ஐயோ! என்னை அடிக்காதீங்க அப்பா! அடிக்காதீங்க!" என்று புலம்பினான். மணியின் சோகக் கதறலைக் கேட்ட எல்லோருக்கும் திகிலாகி விட்டது.

மூத்தண்ணாவின் மனம் உருகிற்று. அவர் கண்கள் முதல் முதலாக இப்பொழுதுதான் கண்ணீர் வடித்தது.

"டாக்டர்! என் குழந்தை......" என்று உண்மையாகவே கதறினார் மூத்தண்ணா.

"என்னய்யா பெரிய மனுஷன்! அடிக்கிறதையும் அடித்துத் தீர்த்துவிட்டு, இப்பொழுது என்னய்யா உமக்குக் குழந்தை வேண்டிக் கிடக்கிறது..." என்று கடுமையாகச் சொன்னார்.

"ஐயோ! டாக்டர்......" என்ற மூத்தண்ணா அப்படியே மூர்ச்சையாகி விழுந்தார்.

திடீரென்று மணி அவர் முன் வந்து நின்றான். அவர் உடம்பைக் குலுக்கி அவரை எழுப்பினான். தந்தையை அன்போடு பார்த்தான்.

"அப்பா! அம்மாவைச் செய்யாத கொடுமையெல்லாம் செய்தீர்கள். சொத்தையெல்லாம் சூறையாடினீர்கள். பத்து வருஷம், குடும்பம் என்று ஒன்றிருப்பதையே மறந்து, நிம்மதியாகக் கிலக்குத் தொண்டு செய்ய எப்படியப்பா உங்கள் மனம் துணிந்தது! திரும்பி வந்தீர்கள். எங்களைப் பார்த்தும் பார்க்காதவராய் இருந்து விட்டீர்கள்! ஏனப்பா இப்படி உங்கள் கடமையை மறந்தீர்கள்! கடமையைத்தான் மறந்தீர்கள், உங்கள் உணர்ச்சியையும் மறந்து எங்களிடம் அன்பு காட்ட மறந்து விட்டீர்களப்பா! அப்பா! அன்புதான் அப்பா தெய்வம். உங்கள்மீது அன்பு காட்டும் அம்மாதான் தெய்வம்" என்று மணி பேசப் பேச மூத்தண்ணா மூளை வேலை செய்தது.

அவருடைய உணர்ச்சியில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவரிடமிருந்த மூர்க்க குணம் மறைந்தது. அவரிடம் இருந்த மனித உணர்ச்சி, தந்தையின் இதயம், குடும்பத் தலைவன் என்ற பொறுப்பு செயல்பட ஆரம்பித்தது. அவரிடம் அவர் மனைவி காட்டி வந்த அன்பு வெற்றி பெற்றது.

"மணி!" என்ற சத்தத்தோடு மூத்தண்ணா திடுக்கிட்டெழுந்தார். தான் நன்றாகத் தூங்கி விட்டதை உணர்ந்தார். தன்னுடைய செயலை நினைத்து உண்மையிலேயே கண்ணீர் விட்டார்.

"மணி! மணி!" என்று அலறிய வண்ணம் வீட்டுக்குள் ஓடினார்.

திடீரென்று எழுந்த தந்தையின் சத்தத்தைக் கேட்டு மணி விழித்துக் கொண்டான்.

அவனை அப்படியே தாவி எடுத்துத் தம் மடியில் கிடத்திக் கொண்டார்.

"மணி! இன்று முதல் நான் ஒரு புது மனிதன்! இனி என் குடும்பமே என் வாழ்வு! இது சத்தியம்!" என்றவாறே மணியின் கையைப் பிடித்துச் சத்தியம் செய்தார்.

"தூங்குகிறவனை எதற்கு எழுப்புகிறீர்கள்!" என்று பயந்துகொண்டே கேட்டாள் மனைவி.

"ராஜம்! இந்தப் பாவியை மன்னித்து விடு! இன்று முதல் நான் புதிய மனிதன். உன் மாசற்ற அன்பு வெற்றி பெற்று விட்டது" என்று கனிந்த குரலில் கூறினார்.

"அப்பா! ரொம்ப நல்லவங்களாச்சே!" என்றாள் இதைப் பார்த்த சரோஜா.

மணி எல்லாவற்றையும் பார்த்துத் தன் காயத்தையும் மறந்து விட்டான். உணர்ச்சியுடன் "அப்பா!" என்றான். அப்படியே அவனைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டார் மூத்தண்ணா.

Edited, Printed and Published by K. Krishnamurthy at the "Kalki" Press
No 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras

# சீக்கிரமே நுரையும் ஸன்லைட் அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்யும்



"வாத்தியார் அம்மாள் என் சுத்தமான தோற்றத்தை புகழ்கிறாள். என் தாய் என் பிராக்குகளை ஸன்லைட் சோப்பினால் பளிச்சென்று வெண்மையாக சலவை செய்வதுதான் இதற்குக் காரணம்."



"என் வகுப்பில் நான் தான் அதிக சோபையுடன் விளங்குகிறேன். என் கவுன் பிராக்கை ஸன்லைட் சோப் எவ்வளவு பிரகாசமாக சலவை செய்திருக்கிறதென்று பாருங்கள்!"




## ஸன்லைட் சோப்

துணிகளைக் காப்பாற்றுகிறது, சிரமத்தைக் குறைக்கிறது, பணத்தை மிச்சப்படுத்துகிறது

S. 219-50 TM

**REGD. No. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*



# நாளுக்கு நாள்

## அதிக தெளிவான,

## எழிலோங்கும் சருமம்



ரெக்ஸோனாவிலுள்ள **கேடில்** இந்த அற்புத

வேலையைச் செய்யட்டும்



ரெக்ஸோனாவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெது வாகத்தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும் தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள்.




# ரெக்ஸோனா

## கேடில் கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்திற்கு நாட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP 107-50 TM

ரெக்ஸோனா ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.